பிஸ்மில்லா ஹிர்றஹ்மா னிர்றஹீம்.

# ஸைத்தூன் கிஸ்ஸா.



அலி றலியல்லாஹு அன்ஹு அவர்களு
டைய குமாரராகிய முஹம்மது ஹனீபு
இரம்ராஜன் மகள் ஸைத்தூனைப்
போர்புரிந்து மணம் புரிந்தது.




இதை
பேட்டை ஆம்பூர்
வாலே பாவா ஸாஹிபு அவர்கள் குமாரராகிய
அப்துல் காதர் ஸாஹிபு
அவர்களாலியற்றப்பட்டு,
சென்னை, திருவல்லிக்கேணி,

ஹாஜி M. A. ஷாஹுல் ஹமீது & ஸன்ஸ்
அவர்களால் தங்களது
ஷாஹுல் ஹமீதிய்யா அச்சியந்திர சாலையிற்
பதிப்பிக்கப்பட்டது.

ஐந்தாம் பதிப்பு.

1951

[அணா 10

பிஸ்மில்லா ஹிர்றஹ்மா னிர்றஹீம்.

# ஸைத்தூன் கிஸ்ஸா.



அலி றலியல்லாஹு அன்ஹு அவர்களு
டைய குமாரராகிய முஹம்மது ஹனீபு
இரம்ராஜன் மகள் ஸைத்தூனைப்
போர்புரிந்து மணம் புரிந்தது.

---

இதை

பேட்டை ஆம்பூரிலிருக்கும்
வாலை பாவா ஸாஹிபு அவர்கள் குமாரராகிய
அப்துல் காதர் ஸாஹிபு
அவர்களாலியற்றப்பட்டு,

சென்னை, திருவல்லிக்கேணி,
ஹாஜி M. A. ஷாஹுல் ஹமீது & ஸன்ஸ்,
அவர்களால் தங்களது
ஷாஹுல் ஹமீதிய்யா அச்சியந்திர சாலையிற்
பதிப்பிக்கப்பட்டது.

ஐந்தாம் பதிப்பு.

1951

இதன் விலை] [அணா 10





பிஸ்மில்லா ஹிர்றஹ்மா னிர்றஹீம்

# ஸைத்தூன் கிஸ்ஸா.



அல்ஹம்து லில்லாஹி றப்பில் ஆலமீன். வானம் பூமி அருசு குருசு சுவர்க்கம் நரகம் மலை கடல் மரம் முதலியவைகளும் பறவைகளும் நாற்கால் ஜீவன்களும் மலக்குகள் மனிதர்கள் ஜின்கள் படையுண்ட படைப்புகள் யாவற்றும் புகழும் புகழ்ச்சிகளெல்லாம் அல்லாஹு தஆலா ஒருவனுக்கே லாயக்கா யிருக்கின்றன. இன்னுமவன் எப்படிப்பட்ட ஸாஹெபேயானால் தன் அடியார்களுடைய குற்றங்களைப் பொறுத்து சுவர்க்கத்தில் சேர்க்கப்பட்ட றஹீம்; அவனன்றி இரண்டு உலகத்திலும் உதவி யொத்தாசை செய்பவர்களொருவருமில்லை இன்னும் நிஃமத்தும் தறூதும் அவன் தூதாராகிய முஹம்மது முஸ்தபா ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி வஸல்லம் அவர்களுக்கும் அவரடியார்களுக்கும் அஸ்ஹாபுமார்களுக்குமாம், ஆமீன்.

இந்த கிஸ்ஸாவானது உருது கிதாபிலிருந்தது. இதனை உருது பார்ஸீ வாசிக்கத் தெரியாதவர்கள் எளிதில் அறிந்து மகிழ்வு கொள்ளும்படி தமிழில் வெள்ளை மொழியாகவும் கொஞ்சம் வசனமாகவும் கொஞ்சம் கவியாகவும் சகலபேரும் வாசித்து இன்புற, பேட்டை ஆம்பூரிலிருக்கும் வாலை பாவா ஸாஹிபு அவர்கள் குமாரர் அப்துல் காதர் ஸாஹிபு அருளிச் செய்தது.

---

## அலங்காரக் கண்ணி.

### முஹம்மது ஹனிபு வேட்டைக்குப் போகுதல்.

ஆதி அனுப்பிய வேத முறையின்படி அறிந்துசகலோரும்
அணுவளவாகிலும் பிசகில்லாமல் அதபுடனே நடக்க
மானும் புலியும் ஒரு துறை தண்ணீர் மகிழ்வுடனே குடிக்க
பாம்புங் கீறியு மோரிடங்கூடி படுத்து நித்திரை செய்ய
இப்படி யரசர் யுமறுகத்தா பிருந்தா ராசாண்டு
சகல தேசத்து ராஜாக்களெல்லாம் இவர்கைக் குள்ளாக
அடங்கி யொடுங்கி ஆண்டுவருகிற அந்தகாலையிலே
ஒருநாள் முஹம்மது ஹனிபா காட்டுக்கு உற்ற வேட்டையாட
நாடி தன்கூட நாலுபேர் தன்னை நடந்திட தானழைத்தார்
இரண்டு வீரர்கள் அபூபக்கர் ஸித்தீக்கு உற்ற பிள்ளைகளாம்
இரண்டு சூரர்கள் உமறு கத்தாபின் உற்ற பிள்ளைகளாம்

இந்த அஞ்சுபேரு மொன்றாய்கூடி ஆலோசனை செய்து
காட்டுக்குப்போ யினிவேட்டைகளாடிட கொண்டாரந்நேரம்
வேட்டையின் ஆயுத மெடுத்தார்கள் கைகளில் வேண்டுமானதெல்
பூட்டியே கொண்டார் அஞ்சு பேர்களும் மதின நகர்நீங்கி [லாம்
காற்றைப்போல் பறந்தது குதிரைகள் காடு மலைகளெல்லாம்
அப்படிகுதிரைகள் பறந்துபோகிற அந்நேரவேளையிலே
செந்தூள் பறந்து தூசியெழும்பிட சூரர்கள் கண்டார்கள்.
கருந்தூள் பறந்து தூசியெழும்பிட கண்டா ரந்நேரம்
அதிசயமாகவே பார்த்து நிற்கிறார் ஐந்து ராசர்களும்
அந்த வேளையி லென்ன காண்கிறார் ஐந்து ராசர்களும்
அப்போது கண்டாள் லைதூனிந்த ஐந்து பேரை காட்டில்
மின்னல் மின்னின போலே குதிரைகள் விட்டாள் லைத்தூனும்
காற்றைப்போலவே பறந்தினி வந்தாள் காட்டில் லைதூனும்
ஐந்து பேரையும் வளைத்துக்கொண்டாள் ஆங்காரத்தோடு
காகம் பருந்துகள் பறந்திடமுடியா காட்டில் பெரியகாடு
சிங்கம் புலிகள் திரிகிறதில்லை சேர்ந்த பெரியகாடு
எனக்கு சகலமும் பயந்து ஒளித்திடும் என்றன் சொந்தக்காடு
அந்தக் காட்டினில் தைரியமாக அலைந்து திரிகிறீர்கள்
கொஞ்சமும் எந்தன் பயமில்லாமல் கூடித்திரிகிறீர்கள்
உங்களுயிரு வேண்டுமாயிருந்தால் வரமாட்டீர் இங்கே
முடிவுகாலுங்களுக் காச்சுது என்று மொழிந்தாள் லைதூனும்
அந்த வார்த்தையைக் காதிலே கேட்டு அரசர் முஹம்மதனிபு
பசுகள் புலியை மிரட்டும் வாறாய் பேசுறாய் யென்முன்னே
கோழிகள் நரியை மிரட்டும் வாறாய் கொதிக்கிறாய் யென்முன்னே
எலிகள் பூனையை மிரட்டும் வாறாய் எதிர்த்தா யென்முன்னே
(நீ) பெண்ணாய்ப்பிறந்தவ ளென்முன் னதிகமா பேசுகிறாய் வீணாய்
ஆணுரு கொண்டவ ளென்னை நீ மிரட்ட ஆகுமா வுன்னாலே
என்ற வார்த்தையைக் காதிலே கேட்டு இருகண் ணெருப்பாகி
அந்த வேளையில் லைதூனுக்கு அதிக கோபமாச்சு
என்னைப் பெண்ணென் றெப்படி யறிந்தா யென்றாள் லைதூனும்
அந்தச் சொல்லைக் காதிலேகேட்டார் முஹம்ம தனிபாவும்
நல்லது நல்லது சொல்கிறேன் கேளு நான் அறிந்தவயணம்
குதிரையேறி நீ வந்திடும்போது கொங்கை யசையக்கண்டேன்
அங்குபடியினில் பாதங்கள்ரண்டு அதிர்ந்து ஆடக்கண்டேன்
அந்தவார்த்தைகள் முழுதுங்கேட்டு அப்போது லைத்தூனும்
ஆனாலா கட்டும் பெண்ணா னானிருந்தால் அதினால் குறைவில்லை
நெஞ் சஞ்சாமல் பேசிடும் வீரா யென் சொல்லைக் கேளு
வாரியடித்தேன் கணக்கில்லாத வலிய வீரர்களை
சூறைகொடுத்தேன் கணக்கில்லாத சூரதீரர்களை
மல்லஜட்டிகள் பல்லையிளித்திட மாறிமாறி அடித்தேன்

கணக்கில்லாமல் ராஜாக்கள் தலையை கத்தியா லறுத்தேன்
என்னோடெதிர்க்க இந்த வுலகினில் எதிர் ஒருவருண்டோ
இப்படிப்பட்டவள் என்பேருனக்கு என்னு தெரியாதா
சிங்கங்கள்கதறிட வெட்டி கெலித்திடும் ஸைத்தா னென்பேரு
இராஜாக்கள் தலையை வெட்டி பிளந்திடும் ஸைத்தா னென்பேரு
வீரர்கள் தலையை வெட்டிப்பிளந்திடும் ஸைத்தா னென்பேரு
ஜட்டிகள் தலையை வெட்டி யெறிந்திடும் ஸைத்தா னென்பேரு
எந்தன் பேரைக் கேட்டாலொன்றுந் தண்ணீர் குடிக்காது
என்னுடைய தகப்பன் இரமெனும்பட்டணம் இருக்கிறுன் ராஜா
அப்படிப்பட்டவன் வயிற்றில் பிறந்த ஆண்சிங்கம் நானே [வாய்
பதினேழுலட்சம் படைக்கு அதிபதியார் என் தகப்பன்
என்றசொல்லைக் காதிலேக்கேட்டு இறைபுலி அலிமகனர்
என்பெயருனக்குத் தெரியுமா பெண்ணே யென்றா ரப்போது
பூமியிலுள்ளவையெல்லாம் நடுங்கும் புலி அலி மகனுன்
அல்லாபுலியென பெயர்மிகபெற்ற அலியார் பெருமகனுன்
ஆதிதூதரின் பேரபிள்ளைநான் ஆண்மை யுள்ளவனுன்
உயர்ந்தகுலத்தில் பிறந்தோனுலும் என்பேர் முஹம்மதனிபு
வலியில் சண்டையில் தந்திரயுக்தியில வல்லமையுள்ளவனுன்
என்றவார்த்தையைக் காதிலேகேட்டு எதிர்த்து ஸைதானும்
நல்லது உன்னுடைய வல்லமையெல்லாம் நானறிவேன் பாரு
இப்போது என்னுடன் சண்டை நீ செய்திடு அலியின்மகனுரே
வல்லமை யெல்லாம் என்முன் காட்டிடு அலியின்மகனுரே
என்றவார்த்தையைக் காதிலேகேட்டு ஏக அலிமகனர்
சொன்னுரப்போ ஸைத்தானுக்கு சேதியொன்று கேளு
அடிக்கிறதில்லை யுன்னைநாங்கள் ஆங்காரங்கொண்டு
எதிரி அடித்தபின் நாங்களடிப்பது எங்கள் வழக்க மென்றூர்
அந்தச்சொல்லைக் காதிலேகேட்டு அப்போ ஸைத்தானும்
ஈட்டியையெடுத்து தலைமேல் சுழற்றி எறிந்தாள் அந்நேரம்
கோடையிடியைப் போலசத்தமு மிட்டுக் குத்தின ளப்போது
முஹம்மதனிபு யிடையினில்பட்டது முஹம்மதனிபாவும்
அந்தக்குத்தினுல் சுழன்றுவிழுந்தார் முஹம்ம தனிபாவும்
மூர்ச்சியாய்ப்போனு ரந்த அடியினுல் முஹம்மது ஹனிபாவும்
ஆதியின்கட்டளை யிப்படியிருந்தது முஹம்மது ஹனிபாவுக்கு
அந்தஸைத்தான் பெண்ஜாதியாக ஆதிகாட்டமுண்டு
அதனுல் பதஹ் பெற்றூள் ஸைதான் அந்தவேளை யிலே
புலியை பசுவும் வெல்வதுண்டோ இந்தப் பூமியிலே
பூனையை எலிகள் வெல்வதுமுண்டோ இந்தப் பூமியிலே
நரியைக்கோழிகள் வெல்வதுமுண்டோ இந்தப் பூமியிலே
நாயனிட்டபடி நடந்து முடிந்தது நாமென் செய்வோம்
முஹம்மது ஹனிபை வெல்லமுடியுமோ வெட்டால் குத்தாலே

எத்தனை வீரரோ மாண்டாரிவர்கை வாளின்வெட்டாலே
எத்தனை சூரரோ மாண்டரிவர்கை ஈட்டின் குத்தாலே
அப்படியிருக்க பெண்ணுலாமா அவரைக்செலித்துக்கொல்ல
அந்தவேளையில் அப்படியிருந்தது முஹம்மது ஹனீபாவுக்கு
மூர்ச்சையுாய் விழுந்துகிடந்தார் பூமிமேல் முஹம்மது ஹனிபாவும்
அந்தவேளையில் ஸைத்தூன்கிட்டே அடுத்து நின்றுளாம்
கொஞ்சநேரம் பார்த்து ஸைத்தூன் குதிரை தன்னைவிட்டு
கீழேயிரங்கிக் கிட்டேபோனுள் கழுத்தையறுப்பதற்கு
கத்தியை வாங்கிக் கையிற்பிடித்து கழுத்தையறுக்கப்போனுள்
அந்தவேளையி லென்னமாகிடந்தார் முஹம்மதனிபாவும்
செத்தபிணம்போ லிருந்தாரப்போது ஒன்றுந் தெரியாமல்
பேச்சுமூச்சு மில்லாமற் போச்சுது முஹம்மது ஹனிபாவுக்கு
அப்படியிருக்கக் கண்டுஸைத்தூன் அந்நேர வேளையிலே
கத்தியையுறையில் போட்டாளாம் காரியமில்லையென
செத்தபிணத்தை அறுப்பது நமக்கு சாமர்த்தியமல்ல
அறுத்தால்வீணு கெட்டுப்போங்கத்தி ஆகாதென வெண்ணி
நாலுபேர்தனைப் பிடித்துக்கொண்டாள் நாலு குதிரையோடு
திரும்பினுள்ஸைத்தூன் தின்னுடைய சீமைக்குசீக்கிரமாய் அப்போ
தகப்பனிடத்துக்கு வந்து ஸைத்தூன் ஸலாஞ்சொல்லி நின்றுள்
மகளைப்பார்த்து சந்தோஷமானுன் மன்னன் அந்நேரம்
எந்தன்மகளே வேட்டைக்குபோய் நீ என்ன கொண்டுவந்தாய்
என்னென்ன வேலைகள் முடித்து நீ வந்தா இப்போது சொல்லு
என்றவுடனே சொன்னுள் ஸைத்தூன் இன்று வேட்டையிலே
முஹம்மதனிபை வாரியடித்தேன் மண்ணுள் தான்போக
நாலுபேர் குதிரையும் பிடித்துநான்வந்தேன் நம்மிட சீமைக்கு
அலியின் பிள்ளையென் றெருவன்வந்தான் ஆங்கா ரங்கொண்டு
அதிககெட்டிக் காரனுமவனும் ஆண்மை யுள்ளவீரன்
கூடநாலுபேர் தாங்களுமிருந்தார் குதிரை நானேறி
கொற்றஅலியின் பிள்ளையை யின்று கொன்று போட்டேனையா
என்றிவள் சொன்ன சொல்லைக்கேட்டு எல்லா மந்திரிகளும்
இந்தப்பேச்சுகள் பொய்யென்றுர்கள் ராஜா முன்பாக
முஹம்மது ஹனிபை வெல்வாருண்டோ வெட்டால் குத்தாலே
சீமைகளெங்கும் பேருபெற்றவர் சண்டைசெய்வதிலே
ஆண்சிங்கமா முஹம்மது ஹனிபு அலியார் தன்மகனும்
அலியார்பேரைக் கேட்டாலிந்த அண்டம் புவிநடுங்கும்
பொல்லாக்காபர் தலைகளை வெட்டி பொடி பொடி செய்தஅலி
புத்திரனை படியால் வெல்வது பொய்யென்று சொன்னுர்
அந்த சொற்களைக் காதிலே கேட்டு அப்போது ஸைத்தூன்
மென்மேலாக வாணையிட்டாள் மெய்யென ஸைத்தானு
பின்னுஞ் சொன்னுள்ஸைத்தூனப்போ பெரியோரே கேளும்

மதீனம் போய்நான் புலியலியோடு வல்ல சண்டைச் செய்வேன்
அவரை செலித்துநான் வருவேனுனல் ஸைத்தூனென்பேரு
அப்படிக்கெலிக்கரமல்போனல் பின்னும்இங்கேநான்வரமாட்டேன்
நானுவிதமா பந்தயஞ் சொன்னுள் நல்ல ஸைத்தூனும்.

## இரம்ராஜன் சண்டைக்கு விடுதல்.

அந்தவேளேயில் மந்திரிமார்கள் அரசன் தனைப்பார்த்து
எங்கள் சொல்லைக் கேட்டிடவேணும் இந்நேரவேளையிலே
என்றசொல்லைக் காதிலேகேட்டு ராசனுமப்போது
ஓமந்திரிமார்களே யென்ன சொல்கிறீர் மகிழ்வாகச் சொல்லும்
என்றவுடனே மந்திரிமார்கள் எழுந்துசொன்னுர்கள்
ராஜாதிராஜர்கள் புகழும் சிங்க ராஜாவே கேளு
அறபுதேசத் துள்ளா ரிவர்கள் ஆண்மை யறியவேணும்
சுப்ராயிமார்கள் போலேவிருக்கிறுர் சூரர் நாலுபேரும்
சேவகமார்கள் போலவிருக்கிறுர் தீரர் நாலுபேரும்
கெட்டிக்காரர்கள் போலவிருக்கிறுர் கிட்டே நாலுபேரும்
இவர்களேரும் குதிரையும் கத்தியும் இன்று கொடுக்கவேணும்
நம்முடபடைகளை யிங்கேயழைத்து இவர்கள் தன்னேடு
சண்டைக்குவிட்டு வேடிக்கைப்பார்ப்போம் சாமார்த்தியம் தன்னை
இவர்கள்வல்லமை யறிவோமென்றுர் எல்லா மந்திரிகளும்
அந்தசொற்களைக் காதிலேகேட்டு அப்போது ராஜன்
மந்திரிமார்கள் சொல்லின்படியே மனது சம்மதித்து
நால்பேர் தனக்கும் குதிரையும் கத்தியும் கொடுத்தானே ராஜன்
படைகளை யெல்லா முன்னை நிறுத்திஞன் வேடிக்கை தான்பார்க்க
அந்தவேளையில் ஒன்றுக்கொன்று ஆலோசனைச் செய்தார்
நாலுபேர்களு மொருமனதாக நாடிஞர் அந்நேரம்
பீஸபீல் செய்வோமாகில் நமக்குப் பெரியபலனுகும்
கெலிப்போமாகில் பேர்மிகப்பெறுவோம் கெட்டிக்காரரென்று
வெட்டுப்பட்டு போவோமாகில் வீடு சுவர்க்கமாகும்
என்று நினைத்து ஏறிஞர் குதிரை எழுந்து நாலுபேரும்
கத்தியை யுருவி கையிலே பிடித்தார்கள் காபர்கள் தன்னை வெட்ட
விட்டார்காற்றைப் போலகுதிரைகளை வேடிக்கை தான்காட்ட
புலிகள்போலவே ஆங்காரங்கொண்டு புகுந்தார் படைக்குள்ளே
ஆட்டுகுலத்துக்குள் புலிபோல் புகுந்தார் ஆங்காரங்கொண்டு
துண்டுதுண்டாய் விழவேவெட்டிஞர் சூரர் தான்மடிய
குதிரைகள் துண்டாய் விழவேவெட்டிஞர் குவியமலைபோலவே
பிணக்காடாக்கிஞர் நாலுபேர்களும் பெரிய படையெல்லாம்
செந்தூள்பறந்து போச்சுது எங்கும் சேனைகள் தெரியாமல்
கருந்தூள்பறந்து மூடிக்கொண்டது கண்களே தெரியாமல்
அந்தவேளையில் என்னசெய்தார் நாலு அரசர்களும்

அல்லாதன்னை மனதில் நினைத்து அறுத்தார் காபர்களை
வீச்சுக்கு வீச்சு துண்டு துண்டாய் விழுகுதே பிணங்கள்
தயிரின்குடம்போல் மூளைகள்சிதறி தரையில் விழுகுதுபார்
ரத்தம் ஆறுகள் ஓடிப்போச்சுது ராணுவர் தனக்குள்ளே
குவியல்குவியலாய் பிணங்கள் குவிந்து போச்சுதுபார்
அந்தவேளையி லென்னசொல்கிறுன் ராஜஇறமின்ராஜன்
வீரர்கள் நால்பேரை நீங்கள் விடாமல் பிடியென்றுன்
அந்தச்சொல்லைக் காதிலேகேட்டு அப்போது படைவீரர்
அவர்களைப்பிடிக்க போனுரெல்லாம் அங்குமிங்கும் சுற்றி
பிடிக்கபோனு ரெல்லாம்வெட்டால் போனுரிருதுண்டாய்
கிட்டேயாவரும் நெருங்கிப்பிடித்திட கிட்டாமல்போச்சுது
அஞ்சி அஞ்சியே நின்றுரெல்லாம் அவர்களைப் பிடிக்காமல்
தூரமாய் விலகி நின்றுரெல்லாம் சூரரைப் பிடிக்காமல்
ஒருவர்கையிலு மகப்படவில்லை ஒருவராலுமப்போ
அந்த சேதியைக் காதிலே கேட்டாள் அரசன்மகள் வைசத்தூனு
மெத்தையைவிட்டு கீழேயிறங்கினுள் வேங்கை வைசத்தூனும்
சீக்கிரமாகவே குதிரையிலேறினுள்சிங்க வைசத்தூனும்
காற்றுபோல விட்டாள் குதிரையைக் கடுகவைசத்தூனும்
சண்டைகள்முன்னே ஓடிவந்தாள் சாக்கிரதையாக
கண்ணுல்கண்டாள் வைசத்தூன்ராணி கனத்தபடை யெல்லாம்
மாண்டுகிடக்கிற பிணத்தைக்கண்டு மயங்கி வைசத்தூனும்
சிப்பாய்மார்களே வெட்டிடவேண்டாம் சற்றுநில்லு
சேதமாபோகுது நம்மிடப்படையெல்லாம் சற்றுநில்லு
சண்டைநிறுத்தி போடுங்கள் நீங்கள் சறுதார்மார்களே
கத்தியும் குதிரையும் நீங்கள்கொடுத்தால் காரியமுண்டாகும்
உயிரோடிருக்க நாடினுல்நீங்கள் என் சொல்லைக்கேளும்
உருண்டுமடிந்திட நாடினுல் நீங்கள் ஒரே வெட்டில்போவீர்
முஹம்மது ஹனீபை அடித்தாபோல் மோதி அடித்திடுவேன்
துண்டுதுண்டாய் போக உடல்களை தூளாக்கச்செய்திடுவேன்
வீணுமடிந்திட வேண்டாமென்றுள் வீரிய வைசத்தூனும்
அந்தச்சொல்லைக் காதிலேகேட்டு அந்த நாலுபேரும்
சண்டையை நிறுத்தி போட்டார் நாலு சறுதார்மார்களும்
வைசத்தூன் சொல்லின்படியே கொடுத்தார் சறுதார்மார்களும்
சந்தோஷமாச்சுது வைசத்தூனுக்கு சறுதார்மார்மேலே
அந்தவேளை யிலென்னசெய்தாள் அரசன் மகள் வைசத்தூன்
பிடித்து அடைத்திடசிறையினுள்போட்டாள் புலியெனும் நால்வரையும்

## வைசத்தூன் மதீனம்போகத் துணிதல்.

தகப்பனைப்பார்த்து என்னசொல்லுகிறுள் வைசத்தூனப்போது
சண்டைக்குப்போறேன் அலீயைகெலித்திட சாமார்த்தியஞ்செய்து

பட்டணம் கைவசமாக்கி நான்வாரேன் பாரசண்டை செய்து
எந்தன் பெயரை நிறுத்திவாரேன் எல்லாம் பயந்திடவே
மதீனநகரம் நான் போரேனென்றாள் மகாராஜனோடு
அந்த சொல்லைக் காதிலேகேட்டு அப்போது ராஜன்
என்னசொன்னாய் என்ன சொன்னா யெந்தன் மகளே நீ
அந்தப்பட்டணம் போக நீ வேண்டாம் அங்கேயிருப்பவர்கள்
கொடியவம்பர்கள் வல்லமைக்காரர்கள் கொஞ்சமும்மஞ்சார்கள்
போக நீ வேண்டாம் போனால்வினையும் பொல்லாங்கென்பேரில்
ஆகாவேலைகளாகிடுமங்கே ஆபத்ததிகமாகும்
பின்னாலென்ன வந்து முடியுமோ போகவேண்டாம் நீ
என்ற சொல்லைக் காதிலேகேட்டு எழுந்து ஸைத்தூனும்
பாதம்பணிந்து சொன்னாளப்போது பயப்படவேண்டாம் நீ
வெற்றிபெற்று நான் வருவேனையா தடுத்திடவேண்டாம் நீ
சண்டைசெய்து செலித்து நான் வருவேன் தாரும்விடை என்றாள்
அந்த வார்த்தையைக் காதிலேகேட்டு அப்போது ராஜாவும்
போய்வாமகளே யென்றானப்போ பெரிய ராஜாவும்
தகப்பன் சொல்ல ஸைத்தூன்னெழுந்து சண்டைசெய்வதற்கு
பட்டாகத்தியை யெடுத்துப்பிடித்தாள் பாங்கானகைதனிலே
தாண்டாயுதத்தைக் கூடவெடுத்தாள் சாமர்த்தியங்காட்ட
கத்தியையெடுத்துப் பூட்டிக்கொண்டாள் கழுத்திலப்போது
ஈட்டியை யெடுத்துப் பிடித்தாள் கையில் எதிர்த்தபேரைகுத்த
சண்டைஆயுத மெல்லாமெடுத்தாள் ஸைத்தூன் அந்நேரம்
குதிரையைக்கொண்டுவா இங்கே என்றாள் கொடிய ஸைத்தூனும்
சிங்காரித்தார் நானாவிதமா சிறந்த குதிரை தன்னை
குதிரையைஸைத்தூன் முன்னே நிறுத்தினார் கொண்டு வந்தவீரர்
அந்தவேளையில் ஸைத்தூன்கூட அருமையான பெண்கள்
நாற்பதுபேரும் ஆயுதம் பூட்டி நல்லகுதிரையேறி
வீரியத்தோடு வந்துகின்றார் ஸைத்தூன் முன்னாக
அவர்களைக்கண்டு ஸைதூனப்போ ஆங்காரங்கொண்டு
போட்டாள்காலை குதிரையின்மேலே பெரியஸைதூனும்
அப்போது குதிரை வேகங்கொண்டது அடிகள் தூக்கிவைக்க
படபடவென்று நடந்துபோகுது பறவைபோல குதிரை
தடதடவென்று நடந்துபோகுது தாண்டியே குதிரை
நாற்பது பெண்களும் கூடவே நடந்தார் நரியும் பசுவும் போல்
மதீனமா நகரை நோக்கியே விட்டார் மண்டுகள் தான்பறக்க

## முஹம்மதனீபு எழுந்து மதீனம் போகுதல்.

மூர்ச்சையாய் விழுந்து கிடந்தார் காட்டில் முஹம்மது ஹனி
அவருட குதிரைக் காரனுமப்போ அங்கே வந்து நின்று [பாவும்
ராஜருக்கெல்லாம் ராஜாவான ராஜாவேயின்று

இன்னும் தூங்குகின்றீர் எழுந்திருமென்று உரக்க சத்தமாக
கூப்பிட்டுச் சொல்லிட முஹம்மது ஹனிபு கேட்டு அப்பொழுது
கண்ணை முழித்து எழுந்து கொண்டார் கனவு கண்டாரப்போல்
எழுந்தவுடனே முஹம்மது ஹனீபு என்ன சொல்கிறார்
நல்ல கனவு கண்டு நான் இருந்தேன் நித்திரை செய்யும்போது
என்னை யெழுப்பின வயணமுமென்ன எனக்குச் சொல்லுமென்றார்
அந்தச் சொல்லைக் காதிலேகேட்டு அடிமை அப்போது
அரசாய்வந்த முஹம்மது ஹனிபாவே அடியேன் சொல்லக்கேள்
தங்களை ஷைத்தூன் அடித்த அடியினால் தாங்கள் மூர்ச்சையாகி
இமேனீர் விழ்ந்து வுணர்வில்லாமல் களைப்பட்டு போனீர்
செத்த பிணம்போ லானீரப்போ ஷைதூன் குதிரையைவிட்டு
பார்த்தாள் கத்தியை கையிலேயுருவி பாரஷைதூனும்
செத்தபிணம்போ லிருந்திடக்கண்டு திரும்பிப்போனானப்போ
குதிரைமேலேரி நாலுபேரையும் குதிரையுந் தான் பிடித்து
கொண்டுபோனால் ஷைத்தூனென்று கூறினான் முன்னை
அந்தச் சொல்லைக் காதிலேகேட்டு முஹம்மது ஹனிபாவும்
அதிக துயரங்கொண்டாரப்போ முஹம்மது ஹனிபாவும்
துக்கத்தோடு போனார் மதீனம் முஹம்மது ஹனிபாவும்

## தாயார் மகனைக்கண்டு சொல்லுதல்.

வாடியமுகமாய் முஹம்மது ஹனிபா வந்தார் வீட்டுக்கு
தாயார்மகனார் முகத்தைப் பார்த்து தயவோடு சொல்வார்
என்றனுயிரே என்கண்மணியே என்ன வயணத்தாலே
உறங்கிய முகமாய் வந்தாயென்று உறுதிக்கேட்டாள்
அதற்கு ஒன்றும் சொல்லவேயில்லை முஹம்மது ஹனிபாவும்
அப்போது பீவி ஹனிபா சீக்கிரமாக அடிமைதனைப் பார்த்து
நடந்த காரிய மெல்லாமிப்போ நானறியச் சொல்லு
சேதிகளெல்லா மறைப்பில்லாமல் தெரிய எனக்குச்சொல்லு
பீவிஹனிபாகேட்க ஆதியோடந்தமாய் அடிமைசொல்லிவந்தான்
ஷைதூனாலே பட்டபாடுகளின் சேதியெல்லாஞ் சொன்னான்
அந்தச் சொல்லைக் காதிலேகேட்டு அப்போது பிவிஹனிபாவும்
மகனைப்பார்த்து என்ன சொல்கிறார் ஹனிபா அம்மானும்
உலகினிலுள்ள வீரரைவெட்டினார் உன்தந்தை அலியார்
தேவபரிகளை துண்டாய் வெட்டினார் உன் தந்தை அலியார்
பூதசங்கிகளை பொடிபொடியாக்கினார் உன் தந்தை அலியார்
(நீ) அப்படிப்பட்டவர்மகனாய்ப் பிறந்தாய் ஆண்பிள்ளையென்று
உந்தன் தாயார் எப்படிப்பட்ட வல்லமையுள்ளவளாம்
எத்தனை ஜட்டியோ மல்லர் மாண்டோர் எண்ணமுடியாது
சண்டைக்குப் பெரும்புலி உந்தன் தாயார் சாமர்த்தியக்காரி
தன்மகனாக நீ பிறந்தாயானால் தைரியமில்லாமல்

பெண்ணின்கையா லடிபட்டாய் நீ பேடிகள்போல் மகனே
வீரியமெல்லா மற்றுபோச்சுதே வேட்டை ஆடுகையில்
இப்படிபட்ட பிள்ளையாக நீ யென்வயிற்றிற் பிறக்கலாமா
இதிலும் இறந்து போகுதலெனக்கு ஈன மொன்றுமில்லை
ஆணாய்பிறந்து நீயிருந்தாலவளை அடித்து கெலித்து வருவாய்
ஆணல்லாதலால் அவள் கையால் நீ அடிபட்டு வந்தாய்
என்று தாயார் சொல்லிட முஹம்மது ஹனிபா தானகேட்டு
தலையைக் குனிந்தார் முஹம்மது ஹனிபு தாயார்சொல்கேட்டு

## முஹம்மது ஹனிபு ஸைத்தூனைக் கெலிக்கப் போகுதல்.

தாயார்சொன்ன மொழியைக்கேட்டு தைரியமிகசெய்து
அந்தவேளையி லென்ன வெண்ணினார் முஹம்மது ஹனீபாவும்
பெண்ணாய் பிறந்த ஸைதூன் கூட பெரியசண்டைசெய்து
கெலித்திடவேணும் அதன் பின்னவளை கிடங்கி லடைக்கவேணும்
அவளுட காற்பது பாங்கிமார் தங்களை சிறையிலடைக்கவேணும்
சிறையிலடைத்து வைத்தாலுபேர் தங்கள் சிறையை மீட்கவேணும்
இறமெனும் பட்டணம் புகுந்து அவ்வூரை யிடவேணுங் கொள்ளை
எதிர்த்திடும் பேர்களை துண்டு துண்டாக இரையாய்க்கொடுக்கவேணும்
ராஜனுடைவன் சேனைகள்முழுவதையும் இஸ்லாமாக்கவேணும்
நகரைப்பிடித்து கம்மைவசமாக்கி நாமஆளவேணும்
இப்படிநானுவிதமாய்மனதினுள் எண்ணினாரப்போது
மனத்துள்ளேயே சத்தியஞ்செய்து மனது துணிவாச்சு
வெற்றிபெறுமற்போனால் மதீனம் வரவேகூடாது
சண்டைசெய்து நான் கெலிக்காமற்போனால் திரும்பிவரமாட்டேன்
இப்படிநினைக்க கோபமுண்டது அந்தவேளையிலே
கண்களிரண்டும் சிவந்து போச்சுது முஹம்மது ஹனிபாவுக்கு
படபடவென்று மீசை துடிக்குது முஹம்மது ஹனிபாவுக்கு
பல்லை நறநறவென்று கடித்தார் முஹம்மது ஹனிபாவும்
குதிரைக்காரனைக் கூப்பிட்டுச்சீக்கிரம் குதிரையைக் கொண்டுவாநீ
என்றசொல்லைக்காதிலேகேட்டு அப்போ குதிரைக்காரன்
சீனியையெடுத்துப் போட்டுக்கட்டினன் சீக்கிரமாயவனும்
சிங்காரித்துக் குதிரையையப்போ தீரவீரசூரன்
எதிரில்கொண்டுவந்து நிறுத்தினனிந்த பூமியசையவே
அந்தவேளையில் முஹம்மது ஹனிபு ஆயுதந்தனையெடுத்தார்
கத்தியையெடுத்து கையில்பிடித்தார் கனத்தவீரசூரர்
அம்பையெடுத்தினி போட்டார் தோளில் அலியாரின்மகனார்
சக்கரமெடுத்துக் கையில்பிடித்தார் சமர்த்தரலிமகனார்
தண்டாயுதத்தை யெடுத்து பிடித்தார் ஸைத்தூனைவெல்ல
கேடகமெடுத்து தோளில்போட்டார் கெட்டிக்காரவீரர்
குதிரைமேலேறினர் பூமியதிர்ந்திட கோபமிகவாகி

செந்தூள்பறந்திடவிட்டார் குதிரையை ஸைத்தூன் தனைநாடி
பூமியதிர்ந்திடவிட்டார்குதிரைபூவைகள் தனைநாடி
கருந்தூள்பறந்திடவிட்டார்குதிரையை காரிகைதனைநாடி
கூடஅடிமையை முஹம்மது ஹனிபு கூடகூட்டிபோனார்
இறமின்புறமாய் குதிரையை விட்டு ஏவி நடந்துபோனார்

## பீவிஹனிபா பாந்தியைக் கேட்குதல்.

அந்தவேளையில் ஹனிபாதாயார் அடியாள் தனைபார்த்து
எந்தன் கண்மணி யானமகனார் எங்கேகாணேமென்றார்
சால்கொழுந்தா யுகந்தமகனார் எங்கேகாணேமென்றார்
ஏகன்புலிஅலி யின்றசெல்வனார் எங்கேகாணேமென்றார்
அந்தசொல்லைக் காதிலேகேட்டு அப்போபாந்திபெண்ணு
அம்மாசொல்வேன் காதுகொடுத்துகேள் அரசருன்மகனார்
கோபத்தோடு கண்கள் சிவந்து குதிரைமேல்தானேறி
ஆயுதம்பூண்டு போனாரெங்கேயோ அறியேனனென்றும்
கூடஅடிமையைக் கூட்டிபோனார் கொற்றவரானறியேன்
என்றசொல்லைக் காதிலேகேட்டு ஏங்கி பீவிஹனிபாவும்
நாம்பள் சொன்ன சொல்லால்மகனுக்கு நாண மிகவாகி
நடந்துபோனார் குதிரைமேலேறி கானங்கேகாண்பேன்
எந்தவழியாய் போனது மறியேன் என்னவேலையாச்சுது
எவ்விடங்கண்டு தேடிப்பிடிப்பேன் என்று எண்ணமாச்சு
அதிகப்படையினை யுள்ளவள் ஸைத்தூன் அதிககெட்டிக்காரி
ஒன்பதுகோடி படையினையுடையவன் இரமின்ராஜாவும்
சத்துருவானவன் அவனைஜெயித்திட சண்டைக்குப்பாலகனும்
போன்படியின லென்னவிளையுமோ போவோமென எண்ணி
அப்போதாயார் சஞ்சலங்கொண்டு அதிகக்கலக்கமாகி
வேதனையாகியே மனதுயரமாய் விசனமதிகப்பட்டார்

## ஹனிபா அம்மாள் மகனைத் தேடிப்போகுதல்.

அங்கேபோக வொட்டாமல்மகனை அழைத்துவருவோமென்று
சீக்கிரமாக ஆயுதமணிந்து சிங்கக்குதிரையேறி
இறமின்புறமா குதிரையை விட்டார் எழுந்துபறக்கத்தூளு
இப்படிக்காட்டின் புறமாபீவிஹனிபா ஏங்கிநடக்கும்போது
இருந்தாப்போலே இருந்துதூசியும் எதிரிலெழும்பக்கண்டார்
கண்டார்காற்பது மேலொருகுதிரையும் காட்டினிலோடிவர
அதிகவேகமாய் வாரார்ள் ஸைத்தூன் ஆங்காரங்கொண்டு
ஒத்தைக்குதிரையைக் கண்டாள் ஸைத்தூன் ஓடிவந்துகிட்டே
என்னுடகாட்டினி லென்னமாய்வந்தா யென்றாள்ஸைத்தூனு
கொஞ்சமு மணமஞ்சாமலேவந்தாய் காட்டில் வேட்டையாட
என்னுடையபயமுமில்லாமல் போச்சுதா உனக்குயிந்நேரம்

முடிவுகாள்கிட்டே ஆச்சுது வென்றாள் மோகஸைத்தூனும்
சண்டைசெய்யென்று ளென்னேடிப்போ சாமார்த்தியமாக
உன்னுடையவல்லமை என் முன்காட்டு ஒத்தைகுதிரைக்காரா
அந்தசொல்லைக் காதிலேகேட்டு அப்போ பீவிஹனிபாவும்
என்னசொன்னுயுக்தன்காடா யிதுவுமுன்பமித்தியமா
வேட்டையாடுவோர்க்கெல்லாம் காடுகள் வேண்டுமான இடமாம்
வீண்மொழிகளைப் பிதற்றிடவேண்டாம் விருதுமிகக் காட்டி
ஆணில் உடைகளை உடுத்தி ஆண்போல் ஆயுதம் தான் பூட்டி
காட்டுக்குவேட்டையாட நீ வந்தது காரியமொன்றுமில்லை
வீட்டுக்குள்ளிருந்து நீ நூலினை நூற்பது உனக்குத் தகுந்தவேலை
விருதுகளணிவது ஆடவர்போல் பெண்கள் வேலையல்ல
அந்த வார்த்தையை காதிலேகேட்டு அப்போது ஸைத்தூனும்
பல்லைநொரநொரவென்று கடித்தாள் பாவை ஸைத்தூனும்
கண்கள் ரெண்டும் சிவந்து போச்சுது கடுங்கோபத்தாலே
பெண்ணுகானென்று எப்படியறிந்தா பேடி அல்லவேகான்
புலிகள் யானையைத் துண்டா நறுக்கிடும் பெரிய சிங்கம் நானே
அந்தச் சொல்லைக் காதிலேகேட்டு ஹனிபா அம்மாளும்
உன்னுடமாரின் கொங்கைகள் ரெண்டும் ஆசைய நான்கண்டேன்
குதிரையில் அங்கு படியினில் ரெண்டு காலுமதிரக்கண்டேன்
அதனலுன்னைப் பெண்ணென் றறிந்தேன் ஆணல்லவென்று
அந்த சொல்லைக் காதிலேகேட்டு ஆங்காரங்கொண்டு
(நான்) பெண்ணுயிருந்து பிளந்தேன்வெட்டி பெரிய ராஜாக்களை
கணக்கில்லாத பேர்களும் மாண்டார் என்கை வாளாலே
எண்ணிக்கையில்லா பேர்களுமாண்டார் என்கை வாளாலே
உன்னுடைய காலமும் அடுத்தது என்று உருவினளே கத்தி
கத்தியையுருவி ஓங்கி வெட்டினள் கடுங்கோபத்தாலே
ஹனிபா அம்மாள் தலைமேல் வெட்டிட அப்போது பீவிஹனிபாவும்
கேடகத்தாலே தாங்கினர் வெட்டை கொஞ்சமுமஞ்சாமல்
அந்த வெட்டினல கேடகமறுத்து அந்தவெட்டுருகி
தலையில்காலு விரல்கடை அறுத்துஞ் சஞ்சலமிகவாக
காயம்பட்டது ரெத்தமு மொழிகிட கண்மினுமினுப்பாகி
கிறுகிறுவென்று சுழலுவதாகிக் குத்தினர் பீவிஹனிபாவும்
அந்தவேளையி லென்ன செய்தாள் ஆங்கார ஸைதூனும்
பாசக்கயிற்றினை பீவிஹனிபாமேலே போட்டாள் அந்நேரம்
அந்த வேளையி லென்ன சொன்னர் ஹனிபாஅம்மாவும்
மீனைப்பிடிப்பது போலேபிடித்தாள் ஹனிபா அம்மாளை
அல்லா தனை நாடி புகழ்ந்து அப்போ துஆக்கேட்டார்
உந்தன் காவலில் வைத்திடுமென்னை யிந்தவேளையிலே
உதவியொருவ ரில்லையே யெனக்கு உன்னை யன்றியல்லால்
அந்த வேளையில் முஹம்மது ஹனிபா ஆயாசங்கொண்டு

போகிறவழியில் விசனமுமானர் பெற்றதாய்மேலே
என்னைத்தேடி யென்தாயார்வருவார் என்ன குற்றமாமோ
எங்கேகண்டு பிடிப்பாரென்னை என்று விசனமாக
இப்படிநானு விதமாயெண்ணி யிருந்திடும் வேளையிலே
அடிமையைப் பார்த்துச்சொன்னர் முஹம்மது ஹனிபா அந்நேரம்

வசனம்.

இம்மேட்டின் மேலேறி நகமுகமுஞ் சுற்றிப்பார். என்ன காரியங்கள் தெரிகிறதென்று சொல்ல, அச்சொல்லைக் குலாம் கேட்டு அப்படி ஏறிபார்க்கையில்: ஆங்கோரிடத்தில் ஸைத்தூன் நிற்கக்கண்டு, ஒ அமீரே! தங்களுடைய தாயார்மேலே ஸைத்தூன் பாசக்கயிற்றை யிட்டுப் பிடித்திருக்கிருர்களென்று சொன்னான். அச்சொல்லை முஹம்மது ஹனிபுகேட்டு, இந்நேரம் நாமுதவி யாய்ப் போகாமற்போனல் வீணுக கொன்று போடுவாளென்று யெண்ணி மின்னல் மின்னினற்போல் குதிரையை ஓட்டம்விட்டு அங்கு சேர்ந்தார். அங்கு தாயாரைக்கண்டு உடனே அக்கயிற்றை அறுத்துப்போட்டு தாயை மீட்டிக்கொண்டார் அதை ஸைத்தூன் கண்டு அதிக கோபங்கொண்டு நான் பிடித்த வேட்டையை விடுவித்து விட்டாயே உன் பெயரென்ன சீக்கிரமாகச் சொல். இன்னும் இந்த சுவார் யாரென்று கேட்டாள். அப்போது முஹம்மதுஹனிபு, யென் பெயர்; உன்னுடன் சண்டை செய்ய வந்தேன், என்னுடைய தாயார் எனக்காக என்னைத்தேடி வந்தார்களென்று சொன்னர். அப்போது ஸைத்தூன் என்னைப்போல் உலகினில் பெண் வடிவானேர்களில் வல்லமையுள்ள வர்களொருவருமில்லையென்று சொல்லிப் பின்னும் உன்னுடைய தாயார் மிகுந்த பலமுள்ளவள், யாதொரு அச்சமின்றி என்னுடன் எதிர்த்து போராடினுள். ஆனலும் நீ முன்னல் என் கைவாளின் வெட்டிற்குத் தப்பிப்பிழைத்து போனய். அப்போது உன்னுடைய கழுத்தை அறுக்காமல் போயினேன். ஆகிலுமிப் பொழுது உனக்கு முடிவின் காலங்கிட்ட நெருங்கின தென்று சொல்லி ஒன்றுக்கொன்று ஆங்காரத்தோடு வெட்டத்துணிந்து கத்திகளை யுருவி கையிற்பிடித்துக்கொண்டு இடியும் இடியும்போல், மலையும் மலையும்போல், புலியும் புலியும்போல் ஆக்ரமித்து நல்ல சண்டை செய்தார்கள். அந்நேரவேளையில் பீவிஹனிபா இரத்தம் ஒழுகும் காயத்தின்மேல் ஒரு துணியால் கட்டிக்கொண்டு தையம்மஞ் செய்து இரண்டு றக்அத்து நபில் தொழுதுகொண்டு கையுமெடுத்து ஹக்தஆலாவினளவில் (யாகரீம்-யாறஹீம்) இந்த சமயத்தில் என் பிள்ளைக்கு வெற்றியைக்கொடு, அவள் மிகுந்த பலமுள்ளவளா யிருக்கிருள். இப்பிள்ளை உன்னுடைய புலி அலியின் பிள்ளை. நீ வெற்றியைக்கொடு. அப்படிக் கொடாவிட்டால்

எங்களுடைய பெயர் போய்விடுமென்று கேட்ட துஆ அந்நேரம் ஹக்தஆலாவினிடத்தில் கபூலாய்விட்டது. அந்தச் சமயத்தில் ஸைத்தூனும் முஹம்மது ஹனிபாவும் இருபேரும் கைகளில் கத்தியையுருவி ஒருவர்க்கொருவர் வெட்டிக் கொண்டார்கள். அவ்வெட்டுகளை ஒருவர்க்கொருவர் படாமல் கேடகத்தினால் தாங்கிக் கொள்வார்கள். இப்படி வெகு நேரம் வரைக்கும் சண்டை செய்து ஒருவர்க்கொருவர் தாழாமல் கடைசியில் மூஹம்மது ஹனிபு ஸைத்தூனைப்பார்த்து நீ யென்னுடைய இடையில் கையைப்போட்டு உன்னுடைய வல்லமை யெல்லாங்கூட்டி என்னைத் தூக்கென்று சொல்ல, அப்போது ஸைத்தூன் அவரிடுப்பில் தன் கையைக் கோர்த்து தன் பலமெல்லாங் கூட்டி குதிரையின் மேலிருக்கிறவரை தூக்கினாள். அவர் எழும்பவில்லை. பின்னும் முகம் சிவக்கும்படியாக அதிக பலமாக தூக்கினாள். அப்போதும் எடுக்கமுடியவில்லை. பின்பு முஹம்மதனிபு ஸைத்தூனுடைய இடுப்பில் தன் கையைமாட்டி ஒருசத்தமிட்டு மேலுக்கு தூக்கி தலைமேலாகச் செய்து வானத்தின் புறமாகத்தூக்கி யெறிந்துவிட்டார். அப்பொழுது தாயார் மகனைப்பார்த்துக் கூவி, ஓ யென்கண்மணியான மகனே! நீ சீக்கிரமாகச் ஸைத்தூனைக் கீழேவிழ ஒட்டாமல் தாங்கிக் கொள், தாங்காவிடில் வீணாயிறந்துபோவாள. ஆகையால் நீ தாங்கா விட்டால் உனக்கு நான் பால் கொடுக்கிறதைப் பொறுப்பிக்கேனென்று சொல்ல அதை மூஹம்மது ஹனிபு கேட்டு, கீழே விழ வொட்டாமல் கையாற்றாங்கிக் கீழே விட்டார். அப்போது ஸைத்தூன்முஹம்மதனிபாவைப்பார்த்து நானொரு விரதஞ்செய்து கொண்டேன். அதென்னவெனில் என்னுடன் சண்டை செய்து என்னை யார் செலிப்பார்களோ, அவருக்கே நான் மனைவி. ஆகையால் நான் தங்களுடைய அடியாள். தாங்கள் எனக்குப் புருஷரென்று சொன்னாள். அந்த சொல்லை முஹம்மது ஹனிபுக் கேட்டு, நல்லது நீ குபிரை நீக்கி கலிமா ஓதி நேர்வழியிலாகென்று சொன்னார். அதைக்கேட்டு உடனே ஸைத்தூன் கலிமா ஓதி ஈமான் கொண்டாள் கூட அவர்களுடைய 40-பாந்திகளும் கலிமா ஓதி ஈமான் கொண்டு இஸ்லாமானார்கள்.

அப்போது முஹம்மது ஹனிபு தாயாரைப்பார்த்து நீ ஸைத்தூனையும் கூட இந்த 40-பாந்திகளையும் மறைத்துக்கொண்டு மதீனத்திற்குப் போங்கள், நான் செய்துவந்த ஷரத்தின்படி இறமென்னும் பட்டணம் போய் அவ்வரசனோடு சண்டைசெய்து செலித்து அவர்களை இஸ்லாமாக்கி அந்த 4-பேரையும் மீட்டிக்கொண்டு வாராமல் என் முகத்தை மதீனத்திற்குக் கொண்டுவரமாட்டேனென்று சொல்லி ஸைத்தூன் வல்லமைக்காரியென்று அவளை நம்பாமல் இரண்டு கையையும் பிடித்துகட்டி மற்ற 40-பாந்திகளையும் அதேபடிக் கைகளைக்கட்டி தாயாரின் புறமாக ஒப்படைத்து விட்டு

மதீனம்போகச் சொல்லி, தான் இறமெனும் பட்டணத்தை நாடிப் போயினர். பின்பு ஹனிபு அம்மாள் ஸைத்தூனையும் நாற்பது பாந்திகளையும் கைகட்டோடு குதிரைகளின் மேலேற்றி மதீனத்தின் புறமாக வழிபிடித்து நடந்துபோகையில் அக்காட்டில் ஒரு ராஜன் தன்படைகளோடு வேட்டையாட வருகிற சமயத்தில் இரண்டு புலிகள் அவன் கண்ணில் எதிர்ப்பட்டது. அப்புலிகளின் மேல் தன் குதிரையை விட்டான். புலிகள் முன்னும் குதிரை பின்னுமாய் ஒடி வரும்போது அந்தக் கொடிய அரசனுடைய பார்வை இவர்கள் பேரில் விழுந்தது. அப்போதவன் தன் குதிரையை பீவிஹனிபா ஸைத்தூன் 40-பாந்திகளுமாக வருகிற பாதையை வந்து வளைத்து நீ யார்? எங்கிருந்து வருகிறாய்? இவர்களை யெங்கே கொண்டுபோகிறாய், இவர்களும் யாரென்று கேட்டான். அதற்கு பீவிஹனிபா, அப்பாதகனைப்பார்த்து நான் அலி புலியாருடைய பெண்ஜாதி இப்பெண் என்னுடைய மருமகள். மற்றவர்களெல்லாம் பாந்திகளா யிருக்கிறார்கள். நாங்கள் மதீனத்திற்கு போகிறோமென்று சொல்ல, அதைச் சண்டாளராஜன் கேட்டு, நீ உன் மருமகளை என்வசம் விட்டு உன்னுடைய பட்டணத்தை நோக்கி உன் வீடு போய்ச் சேரென்று சொன்னான். இச்சொல்லை பீவிஹனிபாக்கேட்டு அதிக கோபங்கொண்டு இரண்டு பேரும் ஒன்றோடொன் றெதிர்த்து பாய்ந்து அதிகச் சண்டை செய்தார்கள். அந்நேரவேளையில் பீவி ஹனிபாவை அந்தக் கொடிய காபிராகிய அரசன் தண்டாயுதத்தினாலடித்தான். அவ்வடி முன்னால் காயம்பட்டிருந்த காயத்தின்பேரில் விழுந்தது. அதனாலப்பொழுது பீவிஹனிபாவிற்கு அதிக வருத்தம் தோன்றினது. அப்பொழுது பீவிஹனிபா ஹக்கதஆலாவினிடத்தில் யாறப்பே! நான் உன்னுடைய புலியாருடைய மனைவி. ஆகையால் இவ்வேளையில் என் வெட்கத்தைக் காப்பாற்றி, இவனை விட்டு மீட்க வேணுமென்று துஆக் கேட்க அந்த துஆ ஹக்கதஆலாவிடத்தில் கபூலாய் விட்டது. அந்நேர வேளையில் ஒரு பக்கமாயிருந்து தூசி எழும்பினது. அந்த தூசி அவன் கண்ணில் வீழ்ந்தது. அதனால் அவன் தன் கண்களைக் கசக்கிக்கொண்டிருந்தான் அந்தச் சமயத்தில் ஒரு மலக்கு வந்து அங்குபடியைப் பிடித்து ஒரு கொடிக்குள் ஒருவர் கண்ணுக்குத் தெரியாமல் பீவிஹனிபாவை அவ்விடம் விட்டு வீட்டிற்குக் கொண்டுவந்து சேர்த்துவிட்டார். பின்பு அரசன் தன் கண்களைக் கசக்கி முழித்துப் பார்க்கையில் தூசியுமில்லை பீவிஹனிபாவுமில்லை. அங்கே ஸைத்தூனும் 40-பாந்திகளும் மாத்திர மிருக்கக்கண்டு அதிக சந்தோஷத்தோடு ஸைத்தூனும் நம் கையில் அகப்பட்டுக்கொண்டாளென்று பூரித்தான். அந்நேர வேளையில் அவனுடைய படைகளும் மந்திரிமார்களும் வந்து சேர்ந்தார்கள். அப்போது அவ்வரசன் அதிக தைரியங்

கொண்டு ஸைத்தூனைப்பார்த்து, ஓ சந்திரவடிவுள்ள மானே! தேனே! நீ என்னைச்சேர ஒப்புக்கொள்ளென்று கொஞ்சமும் மன மஞ்சாமற் சொன்னான். அவன் சொன்னதை ஸைத்தூன் கேட்டு, அடாமடையா! புத்தியில்லாதவனே! ஆனால் நான் என்ன செய்வேன்; இப்போது என்னுடைய இரண்டு கையையுங் கட்டியிருக்கின்றது. அப்படிக் கட்டில்லாமற் போனால் நீ என் னைக் கூப்பிட்ட நாவையும் உன்னுடைய இன்பத்தையும் மகிழ்ச்சி யையும் நான் ஓடிப்போகும்படியாகத் தண்டனை கொடுத்து உன் தலையையும் களைந்து விடுவேனென்று சொன்னாள்.

அந்நேரவேளையில் மந்திரிமார்கள் ராஜனைப்பார்த்து "நீ ஏன் ஆத்திரப்படுகிறாய். கிணற்றுத் தண்ணீரை வெள்ளங்கொண்டு போகுமா? ஒருபோதுங் கொண்டுபோகாது. உன்கையிற் சிக்கி யிருக்கிற பெண் உன்னையுமறியால் ஓடிப்போவாளோ? ஆனாலும் ஆக்கப்பொறுத்தவன் ஆறப்பொருக்கவேணும். இன்னும் தன் னையுமறியாம லுயிர்போகமாட்டாது. நீ உன் மனதைத் திடப் படுத்து" என்று சொல்ல, அரசன் கேட்டு, அவ்விடம்விட்டு தன் சேனைகளோடு இந்த 41-பெண்களையும் பிடித்துக்கொண்டு. ஒரு தோப்பில் வந்து இறங்கியிருந்தான் அந்நேரவேளையில், ஒருகிழவி ராஜனைக்கண்டு தண்டஞ்செய்து அடிபணிந்து நின்றாள். அவள் எப்படிப்பட்ட வல்லமையுள்ள கிழவியெனில் கூடாத பெண்களைக் கூட்டிவைக்கப்பட்டவள்; சேராத பெண்களைச் சேர்த்துவைக்கப் பட்டவள்; நாடாத பெண்களை நாடச்செய்யப்பட்டவள்; மருந்திடு வதிலும் மாந்திரீகத்திலும் கெட்டிக்காரி; அவள் தொழிலே கூட்டி வைக்கிற தொழிலாயிருந்தது. அக்கிழவியை அரசன்பார்த்து, "ஓ! அம்மா! நானொரு பெண்ணைக் கொண்டுவந்திருக்கிறேன். அவள் பேரில் எனக்கு மிக்க ஆசையுண்டு. அவள் என்னை சம்மதிக்கிற தில்லை. அவளை நீ உன்னுடைய மாயவித்தையினால் கூடும்படி செய் விப்பாயாகில் உனக்கு அளவற்ற நிதியுமுடமைகளும் தருவேன்" என்று சொன்னான். அச்சொல்லைக் கிழவி கேட்டு, "ஓ ராஜனே நீ ஒன்றுக்கும் அஞ்சாதே. அவளை உன்னுடன் சேரும்படியாகக் கூட்டிவைப்பது என்னுடையவேலையாயிருக்கும்" என்று சொல்ல அப்பொழுது ராஜன் கிழவியைப்பார்த்து, நல்லது இந்நேரவேளை யில் உன்னிடத்திலென்ன தயாராயிருக்கிறதோ அதையெனக் குக் கொண்டுவந்து குடிப்பாட்டென்று சொல்ல, அதற்குக் கிழவி உனக்கு இப்போது வேண்டுமானால் அமுதமிருக்கிறது. அதைச் சுடவைத்து கொண்டுவந்து தருகிறேன் என்று சொல்ல, அதற்கு ராஜன் அப்படியே ஆகட்டுமென்று சொன்னான். அப்பொழுது கிழவி பாலை அடுப்பில் வைத்து தீமூட்டி யெரித்துவிட்டு அப் படியே அங்கே நித்திரைபோய்விட்டாள். அப்பொழுதொரு கனவு

கண்டாள். அது எப்படிபோலொத்த கனவெல்லால் சில மலக்கு கள் வந்து அக்கிழவியின் தலைமயிரைப்பிடித்து இழுத்துக்கொண்டு நரகத்தில்போட்டு சொல்லமுடியாத கொடூர அதாபுகளைச் செய் தார்கள். அப்போது அக்கிழவி அந்த வருத்தங்களைப் பொறுக்க முடியாமல் கூகூவென்று கதறி, நீங்களென்னததிற்காக நெருப்பி லென்னைப்போட்டு இப்படிபட்டவேதனை செய்கிறீர்கள். அப் படி நானென்ன தப்பிதஞ் செய்தேனென்று கேட்க, அவர்கள் பிறதி ஒன்றுஞ் சொல்லாமல் பின்னு மதிகமான வருத்தங்களைக் கொடுத்தார்கள். அதனால் அக்கிழவிநெருப்பின்சூட்டில் அகப்பட்டு மெத்த விசனப்பட்டிருந்தாள். அந்நேரவேளையில் அவள் வணங்கிக் கொண்டிருந்த லாத்து மனாத்து முதலியபுத்துகள் அவள் முறையிடு வதையும்கேட்கவில்லை. அவளுக்குதவி ஒத்தாசையுஞ்செய்யவில்லை. அதனால் அவள் மனம்வெந்து கைசேதப்பட்டவளாய் அதற்குப்பின் புறமாக முகத்தைதிருப்பி ஹக்தஆலாவை நினைத்து என்னைமீட்டி விடு. இன்னும் காத்துக்கொள். இந்தக் கொடிய அதாபைப் பொருக்க என்னால் முடியவில்லை. எனக்கு உன்னையன்றி உதவி யொத்தாசை செய்பவரில்லை. இது நிரம்ப இக்கட்டாகிய வேளை யாயிருக்கிறது. என்பேரில் கொடுமையாகிய அதாபாலெனக்கு புத்துகளின் பேரில் நிர்ணயமில்லை ஆனால் உன்னையன்றி உலகினில் உதவி யொத்தாசைசெய்ய ஒருவருமில்லை. நாயனே! யென்று துஆக்கேட்டாள். அந்த துஆ அந்நேரம் அல்லாவிடத்தில் கபூ லாய் விட்டது. அப்பொழுது இருந்தாபோலிருந்து மின்வெட்டி னாப்போலே அக்கிழவியின் முன்னால் நபிஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் வந்து தரிசனமானார்கள். அப்பொழுது பூமி வானம் எல்லாம் ஒரே ஒளிவாயிலங்கி விட்டது. அந்நேரம் அக் கிழவி சர்வரே ஆலத்தைப்பார்த்து, "நான் உங்களை என் கண்ணாற் கண்டதினாலே யென்னுடைய வருத்த மெல்லாம் நீங்கிவிட்டது" என்று சொன்னாள். அதற்கு சர்வரே ஆலம், ஓ கிழவியே! நான் முஹம்மது நபி, நீ என்னுடையதீனை விரும்பி ஒப்புக்கொண்ட படியால் உனக்கொரு பயமுமில்லை. இனிமேலுன்னை மலக்குகளும் அதாபுச் செய்யமாட்டார்கள். இன்னும் நரகத்திலும் போடார்கள். இனி நீ கலிமாவை ஓது. அப்படி ஓதாமல் போனால் உனக்கு அதிக அதாபுகள் கிடைக்குமென்று சொல்ல, உடனே அக்கிழவி கலிமா ஓதி ஈமான் கொண்டாள். அப்பொழுது சர்வரே ஆலம் மலக்கு களைப்பார்த்து இனிமேல் நீங்களிவளை ஒன்றுஞ் செய்யவேண்டாம். இவளீமான் கொண்டாளென்று சொல்ல, அவர்கள் அதாபுசெய் வதை விட்டு விட்டார்கள். பின்பு சர்வரே ஆலம் அக்கிழவியைப் பார்த்து என்னுடைய மருமகளாகிய ஸைத்தூன் இங்கே சிறையில் பிடிபட்டு இருக்கிறார்கள். இன்று நீ சீக்கிரமாய்ப்போய் முன்ன மவர்களுக்கு என்னுடைய ஸலாமைச் சொல்லி, அதன்பின்பு நீ

ஒன்றுக்கு மஞ்சாதே. உன்பேரில் அல்லாஹு ஸுபுஹானஹு தஆலாவினுடைய காவல்பாடிருக்கிறதென்று அவர்களுக்குத் தைரியஞ் சொல். அதனாலுனக்கு ஹக் தஆலா மிகுந்த றஹ்மத்துச் செய்வானென்று சொல்லிப் போயினர். உடனே திடுக்கென்று கிழவி முழித்துக்கொண்டு நகமுகமுங் குனிந்து பார்க்கையில் ஒன்றுமிவள் கண்ணிற்கு தோற்றவில்லை. ஆனால் அக்கிழவியின் வீடெல்லாம் கஸ்தூரி வாடை நிறைந்து போயிருந்தது. அதனாலக்கிழவி நிஜப்பாடாய் உடனே யெழுந்து ஸைத்தூன் கிட்டே ஓடிவந்தாள். அப்பொழுது ஸைத்தூன் அக்கிழவி வருவதைக் கண்டு கூட்டிவைக்குங்கள்ளி நம்மிடத்திற்கு வருகிறாளேயென்று அதிக விசனங்கொண்டிருக்கும் சமயத்தில் கிட்டேவந்து மிகுந்த அதபுடனே ஸலாஞ்சொல்லி, பின்பு சர்வரே ஆலம் சொன்ன ஸலாமைச் சொல்லி பின்பு தான்கண்ட கனவின் சங்கதிகளை ஒன்றும் தவறாமல்தான் தூங்கினபோது மலக்குகள் இழுத்துக்கொண்டு போய் அதாபுச் செய்ததும், அங்கே நபிநாயகம் வந்ததும், தான் ஈமான்கொண்டதும், ஸலாமத்து பெற்றதும், நபியுல்லா ஸலாஞ் சொன்னதும், தைரியமான சொற்கள் சொன்னதும் எல்லாம் முடிவு வரைக்கும் சொல்லி, இனி உன்னை மீட்டி விடுவது என்பேரில் கடனாயிற்றென்று சொன்னாள். அதை ஸைத்தூன் கேட்டு உன் பேரில் அல்லா நல்லது செய்வானென்று சொன்னார்கள். அதைக் கேட்டுக் கிழவி அவ்விடம் விட்டெழுந்து உடனே தன் வீட்டிற்குப்போய், கொல்லும்படியான நாவியை யெடுத்துரைத்து அடுப்பிலிருந்த பாலையிறக்கி அதில் இந்த வஸநாவியைக் கலந்து சர்க்கரையும்போட்டு ஒரு பாண்டத்திலிட்டு குடிக்கச் சொல்லி அரசன் கையில் கொடுத்து இன்றிரவு உன்னுடன் சேரும்படி அவளைக் கூட்டிவைக்கிறேனென்று சந்தோஷமான சேதிகளும் சொல்லி, அவளும் உன்னுடன் கூடசம்மதித்தாள்: அவளுக்குச் சம்மதிக்கும்படியான உபாயங்கள் செய்தேன்; குடியென்று சொல்ல, அந்த மடையன் அந்த பாலை வாங்கிக் குடித்தவுடனே விஷம் தலைக்கேறி செத்தான்.

அலங்காரக் கண்ணி.

ஆசைகளெல்லாம் நாசமாய் போச்சுது அன்று ராசர்க்கு
மோகங்களெல்லா முடிவாய் போச்சுது மூராட்டு ராசர்க்கு
அரசன் செத்த உடனே கிழவி அரசன் சேதிசொல்ல
ஓடியேவந்தாள் ஸைத்தூன்கிட்டே உற்றசேதிசொல்ல
அம்மாகேளு அம்மணிகேளு அடியாள் சொல்லுவதை
மாயமருந்தால் செத்தான் ராஜா வார்த்தை சொல்லாமல்
உன்றனைநாடி ராஜனைக் கொன்றேன் உபாய மருந்தாலே
சந்தோஷமாக நீயிரு யென்றாள் சஞ்சலமதனைப் போக்கி

அந்த வார்த்தையைக் காதிலேகேட்டு அப்போது ஸைத்தூனு
கிழவியைப் பார்த்தொரு சேதி சொன்னாள் கிளிமொழி ஸைத்தூனு
என்னுடைய இடுப்பினி லிருக்குது கத்தி எடுத்து உன்கையால்
கையின்கட்டை அறுத்துப்போடுநீ கஷ்டங்களில்லாமல்
என்ற சொல்லைக் காதிலேகேட்டு எழுந்து அக்கிழவி
சூரியை வாங்கி அறுத்தாள் கட்டை சீக்கிரமாய்க் கிழவி
ஸைதூன் சூரியை கையிலே வாங்கி தீவிரமாய் யப்போ
தன்னுட பாக்திமார் கைகளின் கட்டை தானே அறுத்துபோட் [டான்
தீவிரமாகவே குதிரைமேலேறினாள் தீரஸைதூனு
நாற்பதுபாக்தியைக் கூடவேகூட்டினாள் நல்ல ஸைதூனு
சீக்கிரமாகப் போனாள் ராஜன் செத்த இடத்தைத்தேடி
ராஜன் தலையை யறுத்து எடுத்தாள் ராணி ஸைத்தூனு
கையில்தலையைத் தூக்கியேறினாள் குதிரைமேல்ஸைத்தூனு
தோப்பதைவிட்டு வெளியேவந்து சொன்னாள் ஸைத்தூனு
ராஜன் படையா யிருக்கும்பேடிகளே நான் சொல்லக்கேளும்
சிப்பாய் மார்களாயிருந்தால் நீங்கள் சண்டைக்கு வாருங்கள்
சேவகமார்களா யிருந்தால் நீங்கள் சண்டைக்கு வாருங்கள்
மீசைமுளைத்த பேர்களாயிருந்தால் முன்னே ஓடிவாங்கள்
பேடிகளாயிருந்தால் நீங்கள் பேசாமலிருங்கள்
எந்தன் கையிலிருக்கிறதலையை எல்லோரும்பாரும்
உங்க இராஜன் தலையாயிருக்கும் உற்று நீங்கள் பாரும்
கொடியராஜன் தலையையறுத்துக் கொண்டேன் ஸைதூனு
என்றவார்த்தையைக் கேட்டராஜனின் எல்லாப்படையோரும்
அமளிகளாகிப் போச்சுதப்போ அந்தத் தோப்புக்குள்ளே
தலையைஸைதூன் அறுத்தாளென்று சத்தமாகிப்போச்சு
அரசன்மடிந்து போனானென்று அழுகை மிகுதியாச்சு
அந்தசமயத்தில் மந்திரிமார்கள் அலறியெழுந்தார்கள்
ஏழுமந்திரி மார்களுங்கூடி என்னசெய்தார்கள்
இனிநாமிருந்து பலனுமில்லை இவளைவெட்டிப்போட்டால்
நம்முடையராஜனை வெட்டியபழியை நாம்பள் வாங்கவேணும்
சும்மாயிருந்தால் வீரியமல்ல சீக்கிரமாயின்று
நம்முடபடைகளைச் சேர்த்து நறுக்கவேணுமிவளை
உடனே படைகளைக் கூட்டினாரெல்லாம் உற்றசண்டைசெய்ய
கத்திப்படையு மீட்டிபடையு கணக்கில்லாமல் வந்தார்
தண்டாயுதமும் சக்கரமெடுத்து சமர்த்துமிகவேபேசி
பலபலஆயுதம் பூட்டினாரெல்லாம் படையின்பெரும் வீரர்
குதிரைமேலே யேறினாரெல்லாம் பெரியகூட்டமாக
செந்தூள் பறக்க நடத்தினர் படைதிக்குத்தெரியாமல்
கருந்தூள் பறந்து போச்சுது நடக்கும் குதிரை காலாலே
மேகம்போல் மூடிக்கொண்டது வெள்ளைமேகதூசி

நானுவிதமா முழங்குதுசத்த நகரநகவுபத்து
கோடையிடிபோல் முழங்குதேசத்தம் குமுகுமுகுமுவென்று
வந்துவளைந்தார் காபர்படையோர் வெல்லஸைதூனை
அந்தப்படைகளைக் கண்ணுற்கண்டாள் ஆங்காரஸைத்தானு
பல்லைநெறநெற வென்றுகடித்தாள் பாவைஸைத்தூனு
கண்கள்ரெண்டும் சிவந்துபோச்சுது கடுங்கோபமாச்சுது
கத்தியையுருவி கையிலேபிடித்தாள் கனத்தஸைதூனு
குதிரையைகாலினு லிடிக்கியேவிட்டாள் கோதைஸைத்தூனு
கொக்குகுலத்தினில் ராஜாளிப்போல் குதித்தாள் ஸைத்தூனு
ஆட்டுக்கும்பலில் புலியைப்போல் புகுந்தாள் ஸைத்தூனு
கத்தியைவிட்டுக் காபர்படைமேல் கைத்தான்கூசாமல்
மின்னல்போல் மின்னுதுகத்தி முன்பின்தெரியாமல்
பளபளவென்று மின்னுதுகத்தி பட்டாகத்திகளும்
குப்பல்குப்பலாகவே குவித்தாள் கொன்றுஸைதூனு
மலைபோல்வெட்டி குவித்தாள் ஸைத்தூன மண்டைமூளைசிதற
தயிரின்குடம்போல் மூளைகள்சிதற தலைகள்தானுதிற
வெட்டி வெட்டி குவித்தாளங்கே வேங்கைஸைத்தூனு
கூகூவென்று சத்தங்களிட்டு கூடிமடிவாரும்
அம்மம்மா வென்று சத்தங்களிட்டு அலறிமடிவாரும்
சாமியைநினைத்து சஞ்சலமிகுந்து தரைமேல்விழுவாரும்
இப்படிநானுவிதமாய் படைகள் ஏங்கிப்போவாரும
அந்தவேளையில் படைகள் மூறிந்து அவள் முனனெதிர்க்காமல்
ஓடியேபோனுர் வீரர்களெல்லாம் ஒருவரும் நில்லாமல்
சிதறியோடினுர் வீரர்களெல்லாம் திசைதிசையாய்பயந்து

வசனம்.

இப்படி படைகளெல்லாம் ஸைத்தூனுடைய கத்திவெட்டுக்கு ஆற்ருமல் பயந்து ஓடிபோனுர்கள். அப்பொழுது அந்த 7-மந்திரிமார்களும் கைகட்டி மிகுந்த அதபுடனே ஸைதூனுக்கு முன்பாக வந்து நின்று கிடுகலங்கி, ஒ அரசியே! இனியெங்களை வெட்டாதே. எங்களைப் பாதுகாப்பது உன்னுடைய கடமையென்று சொல்லி வேண்டிக்கொண்டார்கள். அதைக்கேட்டு ஸைத்தூன் சண்டையை நிறுத்திவிட்டு மனமிரங்கி அந்த மந்திரிகளைப் பார்த்து நான் சொல்லும்படி நீங்கள் கேட்பீர்களாகில் உங்களுயிருக்கு ஒரு சேதமில்லை இல்லாவிடில் நரகம் போய்ச் சேருவீர்கள் என்று சொல்ல, அதை மந்திரிமார்கள் கேட்டு அதென்ன உத்திரவு சொல்லென்று கேட்டார்கள். அதற்கு ஸைத்தூன் நீங்கள் கழுத்திலிட்டிருக்கிற பூணுலை அறுத்துப்போட்டு உங்கள் வீடுகளிலிருக்கிற புத்துகளையெல்லாம் உடைத்துபோட்டு நீங்களெல்லாம் கலிமா ஓதி ஈமான் கொண்டு இங்கே ஒருபள்ளி ஒன்று கட்டி வணக்கஞ்

செய்து வருவீர்களாகில் சொர்க்கலோகம் கிடைக்குமென்று சொல்ல, அதை மந்திரிமார்கள்கேட்டு, அதேபடிசெய்து கலிமா ஓதி ஈமான்கொண்டார்கள். அப்பொழுது ஷைத்தூன் அதிக சந்தோஷத்தோடு அவர்களிடத்தில் விடைபெற்றுகொண்டு நாம் மதீனத்தையும் அவ்வூராரையும் அவர் வீட்டையும் முன்பின் அறியோமே யென்று கலக்கத்தோடு ஆயாசங்கொண்டு அவ்விடத்தைவிட்டு தன் பாந்திமாருடன் வெளிப்பட்டார்கள்.

## முஹம்மதனிபு செண்டுல் ராஜனைக் காணுதல்.

முன்னுல் முஹம்மது ஹனிபு ஷைத்தூனையும் கூடபாந்திப் பெண்களையும் கைகளைகட்டித் தாயார்வசம் ஒப்பிவித்து நீங்கள் மதீனத்திற்குப் போங்கள், நான் இறமெனும் பட்டணம்போய் வருகிறேனென்று சொல்லி அனுப்பிவைத்துவிட்டு, வருகிறபாதையில் அங்கோர் தோப்பு எதிர்பட்டது. அ தோப்பு எப்படிச் செழித்திருந்ததெனில், உயர்ந்தமரங்களும் தளதளப்பான இலைகளும் மணமுள்ள மலர்களும் பளபளப்பான நானாவித வர்ணமுள்ள கனிகளும் விதவிதமாகிய உருசிகளுமுள்ளதாயிருந்தது. அந்தோப்பும் செண்டுல் பாதுஷா வெனும் அரசனுடைய சோலை அதனுள் 12000படை வீரர்களை வைத்திருந்தான். அந்தத்தோப்பினுள் முஹம்மது ஹனிபு புகுந்து அம்மரங்களையும் பூகாய்கனிகளையும் கண்டு அதிகசந்தோஷத்துடன் அதிலிருந்து சில கனிகளை யறுத்துப் புசித்தார். அதை அந்தத் தோப்பிற்குக் காவலாயிருந்த காவற்காரன் கண்டு மிகுந்த அச்சத்தோடு ஓடோடியும் போய் செண்டுல் பாதுஷாவெனுமரசனிடம் அறபுதேசத்தான் ஒரு அரபியும் அவனுடைய ஆளுமாக நம்முடையதோப்பினுள் யாதொரு அச்சமுமின்றி வந்து புகுந்து நகமுகமும் உலாவி, கனிகளை அறுத்துதின்று ஒரு மரத்தடியில் படுத்து நித்திரை செய்கிறார்களென்று வந்து சொன்னான். அச்சேதியைக் கேட்டு உடனே செண்டுல் பாதுஷா தன்னுடைய 12000படை வீரர்களை ஆயுதங்கள் பூட்டிக்கொள்ளச் சொல்லி அப்படைகளைப் பார்த்து நீங்கள் தோப்பைப் போய்வளைந்து அவர்களைப் பிடித்துக் கொள்ளுங்களென்று கட்டளையிட்டான். அப்படியே அவன் படைகளெல்லாம் தோப்பைச்சுற்றி வளைத்துக் கொண்டார்கள். அந்நேர வேளையில் முஹம்மது ஹனிபாவைப் பார்க்கவேணுமென்று வெகு நாளாக ஹரியாபரி யென்பது மனதில் மிகுந்தபிரியத்தோடு ஆசை வைத்துக்கொண்டிருந்தது. அந்தப்பரி அன்றையதினம் அங்கே வந்து பார்க்கையில், முஹம்மது ஹனிபு நித்திரை செய்து கொண்டிருக்கக்கண்டு சுற்றிப்படைகள் வளைத்து கொண்டிருப்பதையும் பார்த்து ஓகோ, இவர் ஒன்றுந்தெரியாமல் அயர்ந்து நித்திரை செய்கிறாரே, பகைவர்கள் வந்து வளைத்துக் கொண்டிருப்பதும் தெரியவில்லையே. இதனுல் இவருக்கு மோசம் வந்து நேரிடுவதா

யிருக்கிற தென்றெண்ணி, ஓ இமாமே! நீங்கள் அயர்ந்து நித்திரை செய்கிறீர். உம்மைப்பிடிப்பதற்காக வேண்டி செண்டுல் பாதுஷா வுடைய படைகள் வந்து வளைந்து கொண்டிருக்கிறார்கள். நீங்கள் நித்திரையைவிட்டுச் சீக்கிரமாக எழுந்திருமென்று சத்தமிட்டெ ழுப்பினது. அப்பொழுது முஹம்மதனிபு அந்தச் சத்தத்தைக் கேட்டு திடுக்கென்று கண்திறந்து பார்க்கும்போது, சுற்றிலும் ஆயுத முஸ்தீபுடன் படைகள் வந்து சுற்றி வளைந்திருக்கக் கண்டு ஹா! ஹா! நம்மை யெழுப்பினது யாரோ, அல்லது மலக்கோ வென்று எண்ணும் வேளையில் அப்பொழுது ஹரியா பரியானது நான் தான் உன்னை யெழுப்பினேன். என்பெயர் ஹரியா பரி யென்று சொல்லிப்போயினது.

## அலங்காரக்கண்ணி.

அந்தவேளையிலெழுந்தார் முஹம்மது ஹனிபாவும்சீறி
கண்களிரண்டுஞ் சிவந்துபோச்சுது முஹம்மது ஹனிபாவுக்கு
மீசை படபடவென்று துடிக்குது முஹம்மது ஹனிபாவுக்கு
பல்லை நெறநெற வென்றுகடித்தார் முஹம்மது ஹனிபாவும்
ஆங்காரங்கொண்டு குதிரை மேலேறினார் முஹம்மது ஹனிபாவும்
ஆயுதமெல்லாம் பூட்டியெழுந்தார் முஹம்மது ஹனிபாவும்
ஆராபாரத்தோடு வெளியில்வந்தார் முஹம்மது ஹனிபாவும்
பன்னீராயிரம் குதிரையைக்கண்டார் முஹம்மது ஹனிபாவும்
பார்த்தவுடனே கோபமுண்டது முஹம்மது ஹனிபாவுக்கு
கத்திமேலே நாடினார் வெட்டானத்தகோப மாகி
அந்தவேளையிலென்ன செய்தார் செண்டுல் ராஜாவும்
படைகளையெல்லா மொன்றாய்க் கூட்டினான் செண்டுல் ராஜாவும்
பத்திரம் பத்திரமாக இருங்கள் பாராக் காவலாக
என்றசொல்லைக் கேட்டாரந்த எல்லாப் படையோரும்
அந்தவேளையி லென்னசொல்லுகிறான் செண்டுல் ராஜாவும்
சேவகமார்களே எந்தன் சொல்லைச் சீருடனே கேளும்
சிப்பாய்மார்களே எந்தன் சொல்லைச் சிந்தாமல் கேளும்
வெட்டவும் வேண்டாம் குத்தவும் வேண்டாம் வீரியவல்லவரே
கைபிடியாகப் பிடித்துக் கொள்ளுங்கள் காவல் வீரியரே
என்றசொல்லைக் காதிலேகேட்டு அதிலொரு வீரஜட்டி
தண்டாயுதத்தைக் கையிலேபிடித்து சாமர்த்தியம்பேசி
முஹம்மது ஹனிபா முன்னால்போனான் முரட்டு வீரசூரன்
வல்லமைக்காட்டி பிடித்திடப்போனான் முஹம்மது ஹனிபாவை
புலிமுன் ஆடுபோல் வீரன் பெரிய சண்டைசெய்ய
அந்தவேளையில் முஹம்மது ஹனிபா ஆங்காரங் கொண்டார்
ஒருவர்க்கொருவர் வல்லமை பேசி உருவினார் கத்தி
பாவி அடித்தான் தாண்டாயுதத்தால் பாரமிடிபோல

முஹம்மது ஹனிபா தாக்கினர் டாலால் முரடன் தன்வெட்டை
வெட்டினர் முஹம்மது ஹனிபா அவனை மின்னலிடிபோல
குதிரையுமவனும் இரண்டு துண்டாய் கீழே விழுந்து செத்தான்
பின்னுமொருத்தன் வந்துமடிந்தான் பெரிய வெட்டாலே
இப்படியாக மடிந்தார்வீரர் எண்ணிக்கையில்லாமல்
ஆறுயோடி போச்சுது ரத்தம் அங்கே யிடமின்றி
குப்பல் குப்பலாய் குவிந்துபிணங்கள் குவிந்துபோச்சுதங்கே
படைகள் வீணாய் மடிந்ததைக் கண்டான் செண்டூல் ராஜாவும்
பட்டா உருவி கையிலே பிடித்தான் செண்டூல் ராஜாவும்
முஹம்மதனிபா முன்னால்வந்து மொழிந்தா னிடிபோல
ஏழைமனிதனே என்னுடையபடைகளை என்னவேலை செய்தாய்
பஞ்சைமனிதனே என்னுடையபடைகளை பாழ்படுத்திப்போட்டாய்
ஆனலாகட்டு மறிவேன் வல்லமை அடா அடிமை பையா
என்றுசொல்லி அடித்தானேங்கி எடுத்து தண்டத்தால்
அடித்த அடியைத்தாங்கினர் டாலில் முஹம்மது ஹனிபாவும்
இடுப்பில் கையை கொடுத்து தூக்கினர் செண்டூல் ராஜாவை.

. வசனம் .

தலைமேலவனைத் தூக்கிக்கொண்டு, ஓ காபிரானவனே! நீ சீக்கிரமாக ஒப்புக்கொண்டு கலிமா ஓதி ஈமான் கொள்வாயாகி லுன்னைப் பூமிமேல் வாரியடிக்காமல் உயிரோடு விட்டுவிடுவேன்; நீ கலிமா ஓதாமல் போனல் இப்படியே பூமிமேல் அடித்துவிடுவேனென்று சொன்னர். அக்கச் சொல்லை செண்டூல் ராஜா கேட்டுப் பயந்து உடனே கலிமா ஓதி ஈமான் கொண்டார். பின்பு முஹம்மது ஹனிபாவைப் பார்த்து நீ யார்? உன் பெயரென்ன? ஊர்பெயரென்ன? நீ எங்கே போகிறாய்? இதுகளை எனக்குத் தெரியும்படிச் சொல்லென்று கேட்டான். அதற்கு என் பெயர் முஹம்மது ஹனிபு நான் இறமெனும் பட்டணம்போய் அவர்களுடன் சண்டை செய்து இஸ்லாமாக்கப் போகிறேன் என்னூர் பேர் மதீனமென்று சொன்னர். அதற்கு செண்டூல் பாதுஷா, கூட நானும் வந்து சண்டைசெய்து உன்னுயிரைக் காப்பாற்றுவேனென்று சொல்ல, அதற்கு முஹம்மது ஹனிபு, ஓ செண்டூல் பாதுஷாவே! ஒருவரையும் கூட்டிக்கொண்டு போகாமல் தனியாக நான் மாத்திரம் வெற்றிபெற்று வரவேணுமென்று நிய்யத்துச் செய்து கொண்டிருக்கிறேன். ஆகையால் நீ கூட வரவேண்டாமென்று அவரிடத்தில் விடைபெற்றுக் கொண்டு அவ்விடம் இறமெனும் பட்டணத்தின் பாதையின் புறமாக முன்னேக்கித் தன் துலாமும் பின்னால் வரும்படியாக சில தூரம் நடந்து போகும்போது ஹரியபரி வந்து, ஓ பாதுஷாவே! தாங்கள் போகிற பாதையில் இன்னும் சில தூரத்தில் அங்கோரிடத்தில் அக்காள்

தங்கையென்று இரண்டு பேரிருக்கிறார்கள். அவர்களிரண்டு பேரும் அதிக கெட்டிக்காரிகள், வல்லமையுடையவர்கள். தாங்கள் நிரம்ப எச்சரிக்கையுடன் போக வேண்டியதென்று கூப்பிட்டுச் சொல்ல, அவ்வார்த்தையைக் கேட்டு முஹம்மது ஹனிபு பின்னால் திரும்பிப் பார்க்கையில், ஒருவரையுங் காணவில்லை. அதனால், திகைத்து நின்று, ஒருவரையுங் காணோம்; இப்படி நமக்குச் சொன்னவர்கள் யாரென்று புதுமைப்பட்டு அவ்விடம் விட்டுப் பின்னும் முன்னோக்கி நடக்கும் போது, அங்கோர் மரத்தடியின் கீழ் ஒரு பெண் குந்திக்கொண்டு அவ்வழியாக வருகிற பாட்டைசாரிகளைப் பிடித்து அவர்களுடைய உடமைகளை அபகரித்துக்கொண்டு அவர்களையும் கொல்லாமல் உயிரோடு விடுகிறதில்லை. அதனால் அவ்வழியாக ஒருவரும் போகிறதில்லை. தப்பிப் போனால் பின்னுமவர்கள் மீண்டு வருகிறதில்லை. அன்று அந்த வழியாக முஹம்மது ஹனிபு போனார். அவர் வருவதைக் கண்டு அந்தப் பெண்ணானவள் யின்று நமக்குக் கொழுத்த வேட்டை அகப்பட்ட தென்றெண்ணி ஆரபாரத்தோடு ஈட்டியைக் கையிற் பிடித்துக் கொண்டு குதிரையை முஹம்மது ஹனிபாவின் முன்னாக விட்டு ஓடி வந்தாள். அவள் வருவதை முஹம்மது ஹனிபு கண்டு நிற்கையில், கிட்டே வந்து "ஓ சிப்பாயே! உன்னுடைய கத்தியையும் கேடகத்தையும் என் கையிற் கொடுத்து விடு. இல்லாவிடில் இதோ பார் என் கையிலிருக்கிற ஈட்டியாலுன்னை குத்திக் கொல்வேன்" என்று சொன்னாள். அவள் சொல்லை முஹம்மது ஹனிபு கேட்டு புன்னகை கொண்டு "ஓ பெண்ணே! நீ பெண் பிள்ளையாயிருந்து ஆண் வேடம் பூண்டு ஆயுதங்களைப் பூட்டிக் கொண்டு ஆணாய்ப் பிறந்தவர்களுடன் எதிர்ப்பது உனக்குத் தகுதியல்ல. உன்னுடைய வேலை என்னவெனில், சமயல் செய்யவும், நூல் நூற்பதும், வீட்டை விட்டு வெளியே வராமலிருப்பதுமாம். அப்படியிருக்க, நீ என்னை வந்து மிரட்டுவதைப் பார்த்தால் மெத்த ஆச்சரியமாயிருக்கிறது" என்று சொன்னார். அச்சொல்லை அவள் கேட்டு ஓ சிப்பாய்! நீ என்னைப் பெண்ணென்றெப்படியறிந்தா யென்று கேட்டாள். அதற்கு முஹம்மது ஹனிபு, நீ குதிரை ஓட்டம் விட்டுக் கொண்டு வரும்போது உன்னுடைய மார்மேலிருக்கும் இரண்டு கொங்கைகளுமசையக் கண்டேன். இன்னும் குதிரையின் அங்குபடியில் கால்களிரண்டும் அதிரக் கண்டேன். இதனாலுன்னை நான் பெண்ணென்றறிந்து கொண்டேனென்று சொன்னார். அதை அவள் கேட்டு நான் பெண்ணாயிருந்தும் உன்னை போலொத்த வீரர்கள் என் கையால் அநேகம் பேர்களை மாளவுஞ் செய்திருக்கிறேன். வெற்றியும் பெற்றிருக்கிறேன். ஆகையாலுன்னுயிரைத் தப்பித்துக் கொள்ளென்று சொல்லி தன்கையிலிருந்த ஈட்டினால் ஓங்கிக் குத்தினாள். அப்பொழுது முஹம்மது

ஹனிபு அந்த ஈட்டிக் குத்தை தன் கையால் பிடித்துக் கொண்டு இழுத்து அவளுடைய இடுப்பில் தன் கையை விட்டு அவளை மேலுக்குத் தூக்கிக் கொண்டு தன்னுடைய குலாமைக் கூப்பிட்டு இந்தா இவளைப் பிடி, இன்னும் இவளுடைய இரண்டு கைகளையும் உரமாகக் கட்டிவிடு மென்று அந்த குலாமின் வசம் கொடுத்து விட்டார். இப்படியே குலாம் அவளிரண்டு கையையுங் கட்டி பத்திரப்படுத்தினன். அப்பொழுது இவளுடைய அக்காள் கண்டு, அதிக கோபத்தோடு ஈட்டியைக் கையிற் பிடித்துக் கொண்டு காற்றின் விசையாகக் குதிரையை விட்டு முஹம்மது ஹனிபாவின் முன்னம் வந்து நானாவித பாஷைகள் கூறி அவளும் குத்தினள். அதையும் கையிற் தாங்கி பிடித்து முன்போல் அவளிடுப்பில் கையை விட்டு மேலுக்குத் தூக்கி குலாமின்வச மொப்பவித்து இவளையும் கைகளை கட்டிவை யென்று சொல்லி, இரண்டு பேரையும் சிறை பிடித்துக் கொண்டு அவர்களுடைய பட்டணத்துக்குள் புகுந்தார். அப்பொழுது பட்டணத்திலுள்ள குடிகளெல்லாம் இவர்களைப் பிடித்துக் கட்டிக் கொண்டு வந்ததைக் கண்டு அதிக சந்தோஷத்தோடு முஹம்மது ஹனிபாவின் முன்பில் வந்து ஓ பாதுஷாவே! எங்களுக்கு உதவியாக வந்தவரே! யென்று மிகவும் புகழ்ந்து எல்லாரு மிவர் பேரில் நிரம்ப முஹப்பத்தாய், ஓ பாதுஷாவே! எங்களுடைய விண்ணப்பத்தைத் தாங்கள் காதுகொடுத்து கேட்க வேணுமென்று கெஞ்சிச் சொன்னார்கள். அதென்னவெனில், ஓ பாதுஷாவே! இந்த இரண்டு நீலிகளுடைய தகப்பன் மிகவும் நன்றி யுள்ளவன்! அவருக்கு மூத்தபிள்ளை ஆணொன்று இளையப்பெண் இவ்விரண்டு பேரும் இருந்தார்கள். அப்பொழுது அவ்வரசன் இறந்து போனார். அப்பொழுது இவ்விரண்டு பேரும் அண்ணனை இம்ருனைச் சிறையில் அடைத்து விட்டு தாங்கள் ராஜாவாக அரசாண்டு குடிகளை மிகுந்த அநியாயஞ் செய்து எல்லோரையும் ஓட்டி விட்டு எங்களை மிகுந்த வருத்தத்தில் வைத்திருக்கிறார்கள். இவர்கள் செய்யும் அநியாயங்களைப் பொறுக்க எங்களால் எவ்வளவும் முடியவில்லை யென்று சொன்னார்கள்.

## முஹம்மது ஹனிபு இம்ருனை மீட்குதல்.

அப்பொழுது முஹம்மது ஹனிபு அக்குடிகளைப் பார்த்து, இம்ருனை எவ்விடத்தில் சிறையில் வைத்திருக்கிறது, அவ்விடத்தை யெனக்குக் காட்டுங்களென்றார். அப்பொழுது குடிகள் முஹம்மது ஹனிபைப் பார்த்து ஓ பாதுஷாவே! அந்த இம்ருனுக்கு ஒரு காலொன்றுக்கு இரண்டு ரொட்டியும், ஒரு கூஜாத் தண்ணீருங் கொடுத்து அதிக இக்கட்டாகிய சிறையில் அடைத்து விட்டார்களென்று சொல்ல, அதைக் கேட்டு முஹம்மது ஹனிபு இம்ருனை அடைத்திருக்கு மிடத்திற்குப் போய் இம்ருனே! நீ என்ன

செய்கிருய்? என்னமா யிருக்கிருய்? உன்னுடைய சங்கதிகளைச் சொல்லென்று கேட்க, அப்பொழுது இம்ரூன் அந்தச் சத்தத்தைக் கேட்டு இவ்வளவு இரக்கமுடன் என்னை வந்து விசாரிக்கிறீரே நீர் யார்? இவ்விடம் வந்து என்னுடைய ஜீவபத்தின் சங்கதிகளையும் வருத்தங்களையும் கேட்பதினுலே உம்முடைய நாமத்தை சொல்லு மென்று கேட்டான். அப்பொழுது நான் உன்னைச் சிறை மீட்க வந்தேன். என் பெயர் முஹம்மது ஹனிபு, உன்னுடைய உடன் பிறந்த அக்காமார்களைப் பிடித்துக் கட்டிக் கொண்டு வந்திருக் கிறேன். நீ ஒன்றுக்கும் விசனப்படாதே யென்று சொல்ல; அதற்கு இம்ருன, ஓ பாதுஷாவே! என்னைக் கட்டிக் கிணற்றிற் குள் அடைத்து வைத்திருக்கிருர்களென்று சொல்ல அப்பொழுது முஹம்மது ஹனிபு அதிக வல்லமை செய்து இம்ருனை அக்கிணற் றின் சிறையை விட்டு வெளியாக்கினுர். அதனுல் இம்ரூன் பட்ட வருத்தங்களை எல்லாம் தொலைந்து அதிக சந்தோஷமாயி ான். அப்பொழுது முஹம்மது ஹனிபு இம்ருனைப் பார்த்து, நீ கலிமா ஓதென்று சொல்ல உடனே ஆசையோடு கலிமா ஓதி ஈமான் கொண்டு இஸ்லாமாகினுர். பின்பு முஹம்மது ஹனிபு இம்ருனைப் பார்த்து உன்னுடைய உடற் பிறந்த அக்காமாரை நீ யென்ன செய்யச் சொல்லுகிருயோ அதேபடி செய்து விடுகிறேன். உன்னுடைய நாட்ட மெப்படி யிருக்கிறதென்று கேட்க, அதற்கு இம்ருன், ஓ பாதுஷாவே! அவர்களிரண்டு பேரும் மிகுந்த அநியாயக்காரிகள், ஒன்றுக்கு மஞ்சாத பாதகிகள். ஆகையால், அவர்களிரண்டு பேரையுங் கொல்ல நாடுகிறேனென்று சொன்னுர். அதை முஹம்மது ஹனிபு கேட்டு உடனே அந்த இரண்டு பெண் களையும் கொண்டு வரச்சொல்லி யிருக்கப்பட்டவர்களுக் கெல்லாம் பயமாகும்படி இரண்டு பேரையும் நிறுத்தி சுவர் வைக்கச் சொல்லி அம்பினுல் போட்டுக் கொல்லும்படி உத்திரவு கொடுத்தார் அதே படி அவர்களிரண்டு பேரையும் நிறுத்தி சுவர் வைத்து அம்பினுல் போட்டுக் கொன்று போட்டார்கள். அந்த இரண்டு பெண்களும் இறந்து நரகத்திற்கு இரையாய்ப் போனுர்கள். பின்பு இம்ருனை பட்டத்தில் உட்காரவைத்து விட்டு இனி மேல் நீ சுகமாக உன் னுயிருள்ள காலமட்டும் யாதொரு அச்சமின்றி அரசாண்டு கொண்டிரும். நான் வந்த வேலை நாடிப் போகிறே னென்று சொல்ல, அப்பொழுது இம்ருன் பாதுஷா மிகுந்த வணக்கத்துடன் எழுந்து நின்று கைகட்டி அ்ுபாக, ஓ பாதுஷாவே! எனக்கு இன்னுமொரு பயமிருக்கின்றது; அதையுஞ் சொல்லுகிறேன். தாங் கள் காது கொடுத்து கேட்டு என் பேரில் கிருபை செய்து நீக்கிவிட் டுப் போவீர்களாகில் யாதொரு பயமுமில்லை, இல்லாவிடில் என்னு டைய அரசு நிலைக்கமாட்டாதென்று சொல்ல, அப்போது முஹம் மது ஹனிபு இம்ருன் பாதுஷாவின் முகத்தைப் பார்த்து, நீ யா

தொரு அச்சமின்றி அரசாண்டு கொண்டிருவேன்று சொல்ல, அப்பொழுது இம்ரூன் எழுந்துநின்று, ஓ பாதுஷாவே! என்னை அச்சமின்றி அரசாளும்படி உத்திரவு தந்தீர்கள். ஆனாலும் என்னுடன் பிறந்தாளாகிய இரண்டு பெண்களிருக்கிறார்கள். இன்னும் அவர்களிருக்குந்தன்னிலும் என்னுயிருக்கு அபாயமே ஒழிய, எனக்கொரு செழிப்பும் இராது. அவ்விரண்டு பெண்களையு முயிரோடு கொன்று போடுவீர்களாகில் நான் பயமற்று செங்கோல் செலுத்துவேனென்று சொல்ல, உடனே அவ்விரண்டு பெண்களையும் பிடித்து சித்திரைவதை செய்துவிட்டு பின்பு நான் வந்த வேலையை குறித்துப் போகிறேன். இனி என்ன வேண்டுமென்று கேட்க, அதற்கு இம்ரூன், ஓ பாதுஷாவே! என் தகப்பனுக்கு 7-மந்திரிமார்களிருந்தார்கள். அவர்களென் தகப்பனிறந்த பின்பு என்னை மோசஞ் செய்து என் தகப்பனுடைய 7-கோட்டைகளையும், 7-மந்திரிகளும் ஒவ்வொருவர் ஒவ்வொரு கோட்டையைப் பிடித்துக்கொண்டு தங்கள் கைவசமாகச்செய்து ஆண்டு கொண்டிருக்கிறார்கள் அவர்கள் 7-பேரும் ஒருமித்துக்கூடி என்னுடன் சண்டை செய்வார்களென்று அதிக பயமாயிருக்கிறது. ஆகையால் அவர்களையும் வெட்டி அக்கோட்டைகளை என்கைவசமாக்கிப் போவீர்களாகில் எனக்கொரு அச்சமுமில்லை. இல்லாவிடில் என்னை உயிரோடு வைக்கார்களென்று சொல்ல, உடனே முஹம்மது ஹனிபு இம்ரூனைப் பார்த்து உன்னுடைய தண்டுகளை யெல்லாம் சேகரஞ் செய்யென்று சொல்ல, உடனே சண்டைக்குப்போக தயாராகி நின்றார்கள். அப்பொழுது முஹம்மதனிபும் தன் குதிரையின் மேலேறி ஆரபாரத்துடனே இம்ரூனும் இவருடைய படைகளுமாகக் கூடி நகரை விட்டு வெளிப்பட்டு நடந்து போனார்கள். அந்த விஷயத்தை 7-மந்திரிமார்களுங்கேட்டு, தங்கள் தங்கள் படைகளெல்லா மொன்ருகச் சேர்த்து ஓரிடத்தில் கூடியிருந்தார்கள்.

## அலங்காரக்கண்ணி.

படைகளெல்லாம் கூட்டமாகவந்ததைப் பார்த்து ராஜசிங்கம்
கலசலவென்று சிறித்தாரப்போ கனத்த ராஜசிங்கம்
அந்தவேளையி லென்னசெய்தார் அந்தப் படையோர்கள்
மேகம்போல சுற்றிவளைத்தார் வெள்ள மிகசேனை
கத்திகளாலும் ஈட்டிகளாலும் கனத்த தண்டத்தாலும்
அம்பினாலும் போட்டாரென்று அஞ்சுத லில்லாமல்
அந்தவேளையி லென்னசெய்தார் முஹம்மதனிபாவும்
பல்லை நெறநெறவென்று கடித்தார் பாரசிங்கராஜர்
கத்தியையுருவி கையிற்பிடித்தார் கடுங்கோபங்கொண்டு
மீசை படபடவென்று துடிக்குது முஹம்மதனிபாவுக்கு
குதிரையை விட்டார் படைகுள்ளாக முஹம்மதனிபாவும்

குப்பல் குப்பலாக குவித்தார் கொடியகுபார்களை
ஆருயோடிப் போச்சுது ரத்தம் அவனி தெரியாமல்
துண்டு துண்டாயுடல்களறிந்து துடித்து விழுவாரும்
கட்டுமரங்கள் போலவுடல்கள் கணக்கில்லாமல்மிதக்க
மலைபோல் சவங்கள் குவிந்துபோச்சுது மன்னர் வெட்டாலே
பயந்துபோனார் மந்திரிமார்கள் படைகள் மாண்டுபோக
என்னசெய்வோ மினிமேலென்று எண்ணிமிகவானார்
சஞ்சலம்பெருகி மந்திரிமார்கள் தாழ்ந்து போனாரப்போ.

வசனம்.

அப்பொழுது முஹம்மதனிபு சிறுவிளையாட்டு விளையாடி அப் படைகளையெல்லாம் பின்னிட்டோடும்படி வெட்டி அந்த 7-மந்திரி களையும் கைபிடியாக பிடித்து எதிரில் நிற்கச்செய்து நீங்கள் இப் பொழுது கலிமா ஓதி ஈமான் கொண்டாலுங்களுயிர் தப்பி நீங்கள் இன்னும் சில காலம் வாழ்ந்திருப்பீர்கள். இல்லாவிடில் உங்களு யிரை யிழந்து நரகம் போய்ச் சேருவதுமின்றி, உங்கள் பெண்சாதி பிள்ளைகளும் கைசேதப்பட்டு விசன மடைவார்களென்று சொல்ல, அதை மந்திரிமார்கள் கேட்டு உடனேகலிமா ஓதி ஈமான் கொண்டு இஸ்லாமாகினார்கள். பின்பு அந்த 7-மந்திரிமார்களையும் பார்த்து இன்றோடு நீங்கள் இம்ரூன் சொல்லும் படியான சொற்களைக் கேட்டு அவர் கைக்குள்ளடங்கி ஒடுங்கி அடிபணிந்து அன்பாசார மோடு நடக்கவேண்டியதென்று கட்டளையிட்டு அவர்களிடத்தில் தான் போகவேண்டியதை நினைத்து இனி நீங்களெல்லாம் சுகமா யிருங்கள். நான் போகிறேனென்று சொல்ல, அதற்கு இம்ரூனும் நானும் தங்களுடன் வருகிறேனென்று சொல்ல, அதற்கு முஹம் மது ஹனிபு வரவேண்டாமென்று சொல்லி, விடைபெற்றுக் கொண்டு அவ்விடம் விட்டு இறமென்னும் பட்டணத்தை நாடி முன்னோக்கி நடந்து வந்தார். அப்பொழுது இறமின் பாதுஷா தன் னுடைய 17-லக்ஷம் படைகளை யெடுத்து கோட்டைக்கு வெளியே இரண்டு கோயில் ஒரு பெரிய மைதானத்திலெடுத்துப் போட்டு நகமுகன் கூடாரங்களடித்து அங்கே யிருந்தார்கள். அப்பொழுது முஹம்மதனிபு அங்கு சென்று அப்படைகளெல்லாம் தன் கண்ணாற் கண்டு விசனங்கொண்டு பின்பு தன்னுடைய தைரியத்தினால் அவ் விசனத்தை நீக்கி நாம் வருகிற செய்தியை இவர்களுக்கு முன்னடி யாக யார் தெரிவித்திருப்பார்கள். இவர்கள் நாம் வருகிற சேதியை அறிந்து சண்டைக்குத் தயாரா யிருக்கிறார்களென்றெண்ணி அங் கோர் மேடையொன்றிருந்தது. அதன் மேலே நின்று அப்பொழுது முஹம்மது ஹனிபு கலிமாவை ஓதி ஒரு சத்த மிட்டார். அந்தச் சத்தம் அப்படையோர்கள் காது முழுதிலும் கோடையிடியின் சத்தம்போல் விழுந்தது. அதனால் அப்படைகளெல்லாம் பெரிய

கலக்கமாய்ப்போனார்கள். இன்னும் அந்த சத்தத்தால் கர்ப்புள்ள பெண்களுடைய சூலெல்லாம் விழுந்து போயின. அப்பொழுது இந்தச் சத்தத்லதயும் இச்சேதியையும் இறமின் அரசன் கேட்டு தன்னுடைய மந்திரிமார்களை யழைத்து இப்படி வல்லமை யாகிய சத்தம் யாருடைய சத்தம். இதை இன்னாருடைய சத்த மென்று எனக்குத் தெரியப்படுத்துங்களென்று கேட்க, அதற்கு மந்திரிமார்கள் ஆலோசனை செய்து இந்தச் சத்தமானது முஹம் மது ஹனிபாவுடைய சத்தமென்றார்கள். அதை அரசன் கேட்டு மூன்னாள் சைத்தூன் கொன்று போட்டேனென்று சொன்னாளே அவன் எவ்விதத்தினாலே இன்னும் பிழைத்திருக்கிறானென்று கேட்க, மந்திரிமார்கள் அவள்சொன்ன பேச்சு பொய். அவனிப் பொழுது உன்னுடன் சண்டை செய்ய வந்திருக்கிறான். அவன் உனக்குத் தெரியும்படியாக இட்ட சத்தமென்று சொன்னார்கள். அதை அரசன் கேட்டு, உடனே மந்திரிமார்களைப்பார்த்து நம்மு டைய சேனைகளை யெலலாம் சீக்கிரமாக வரும்படியாகக் கட்டளை யிடுங்களென்று சொன்னான். அச்சொல்லைக் கேட்டவுடனே படைகளைக் கூட்டி பேரிகை யடித்தார்கள்.

## அலங்காரக்கண்ணி.

பேரிகையடித்தார் சண்டைக்குபோக புறப்பட்டு வாங்கள்
கத்தி கட்டாரி பூட்டியேயெல்லாம் கடுக ஓடிவாங்கள்
ஈட்டி அம்புகள் தன்னைப்பூட்டி எல்லாரும் வாங்கள்
தண்ட சக்கரம் தன்னையெடுத்து சுறுதியாய் வாங்கள்
நம்முடையபகைவன் வந்தானென்று நகரா அடித்தார்கள்
அந்தச்சத்தம் காதிலேகேட்டு அப்போ படைவீரர்
ஆயுதமெல்லாம் பூட்டியெழுந்தார் ஆங்காரங்கொண்டு
கோட்டைக்குள்ளே வந்துபுகுந்தார் கொடியசிங்கம்போலே
படைகள் வந்ததை ராஜன்கண்டு பூரித்தானப்போ
சந்தோஷமானான் ராஜாமெத்த தைரியந்தான்கொண்டு
ஆயுதமெல்லாம் பூட்டியெழுந்தான் ஆங்காரங்கொண்டு
கண்கள்சிவந்து போச்சுது அப்போ ராஜாவுக்கானதும்
படைகளைக்கூட்டியே வெளியிலவந்தான் பெரிய சிங்கம்போல
குமுகுமுவென்று குமறுதேநகரா கோடையிடிபோல
தடதடவென்று நடக்குது குதிரைகள் தாங்கள் நடனமாடி
மினுமினுவென்று கத்திகள் மின்னிட வெள்ளப்படைகூடி
வந்துநிறைந்தார் இடமில்லாமல் மைதான் முன்பாக
அணியணியாக நின்றாரெல்லாம் ஆங்காரங்கொண்டு
நானாவிதமாய்ப் பந்தயஞ்சொன்னார் நரிமுன்கோழியைப்போல்
படைகள்வந்ததைக் கண்ணிற்கண்டார் முஹம்மது ஹனிபாவும்
பல்லை நெறநெறவென்று கடித்தார் முஹம்மது ஹனிபாவும்

கண்களிரண்டும் சிவந்தது அப்போ முஹம்மது ஹனிபாவுக்கு
மீசைபடபடவென்று துடிக்குது முஹம்மது ஹனிபாவுக்கு
குலாமைப்பார்த்து குதிரைக்குச்சீனி போடென்று சொன்னார்
சீக்கிரமாகவே குதிரையை இங்கே கொண்டுவா வென்றார்
அந்தச்சொல்லைக் காதிலேகேட்டு அந்நேர வேளையிலே
சீக்கிரமாகவே சீனியைக்கட்டி தீனின் புலி முன்னே
குதிரையை நிறுத்தினான் முஹம்மது ஹனிபு கோபமிகவாக
குதிரையின்மேலே யேறினாரப்போ கொடிய சிங்கம்போல
குதிரைக்குசிமிட்டா கொடுத்தார்பறக்க காலின் முள்ளாலே
கொக்குகுலத்தில் ராஜாளிபோல் குதித்தார் படைக்குள்ளே
ஆட்டுக்குலத்தில் புலிபோல்புகுந்தார் ஆண்சிங்கராஜா
கத்தியைக்கையில் வாங்கினாரப்போ கடுங்கோபமூண்டு
துண்டுதுண்டாய்க் கீழேவிழுந்திட சூறைய டிவந்தார்
கண்டங்கண்டமாய்க் குப்பலாய்மடிய காற்றாய்பறந்துவந்தார்
செண்டுகள் போலத் தலைகள் பறந்திட சிதறவெட்டிவந்தார்
தயிரின் குடம்போல் மூளைகள்சிதறிட தாண்டிவெட்டிவந்தார்
அந்தப்படைக்குள் வென்னவாச்சுது அந்நேரவேளையிலே
கூ கூவென்னுஞ் சத்தங்களாச்சுது கோடிபடைக்குள்ளே
கைவேறாகக் கால்வேறாகக் கதறிவிழுவாரும்
சாமிசாமி வென்றுசொல்லி தரைமேல் விழுவாரும்
தேவாதேவா யென்று புலம்பி திகைத்து விழுவாரும்
பூத்துபூத்து வென்று புலம்பி புவிமேல் விழுவாரும்
தண்ணீர் தண்ணீ ரென்றுகூவி தவித்துவிழுவாரும்
சோறோசோறோ வென்றுகேட்டு சோர்ந்துவிழுவாரும்
குதிரைகளிழந்து கால்நடையாகிக் கூவிமடிவாரும்
போதும்போது மென்று புலம்பி பொன்றி மடிவாரும்
பெண்டுபிள்ளைகளை நினைத்து நினைத்து புலம்பிமடிவாரும்
வீடுவாசலை நினைத்து நினைத்து வெட்டாமல் மடிவாரும்
இப்படி முஹம்மது ஹனிபு சண்டை செய்தாரந்நேரம்

வசனம்.

இப்படி முஹம்மது ஹனிபு சண்டைசெய்துவருகிற தருணத்தில் பொழுது மேற்புறம்போய் மறைந்து விட்டது. இருள் வந்து மூடிக்கொண்டது. அப்போது அரசனும்சேனைகளும்கோட்டைக்குள் போனார்கள். பின்பு முஹம்மது ஹனிபு தானிறங்கியிருக்குமிடத்திற்குவந்து குலாமின் கையில் குதிரையைக்கொடுத்துவிட்டு உண்டு பசியாறி நித்திரை போனார்கள். பின்பு பொழுதுவிடிந்தவுடனே ஷாஹேறிறம் தன்னுடைய சேனைகளைக் கூட்டிக்கொண்டு மைதானில் வந்துநின்று சண்டைக் கழைத்தார்கள் அது கண்டு முஹம்மது ஹனிபு தன்குதிரையின்மேலேறி அப்படையினுள்புவி

போல் புகுந்து அனேகர்களை வெட்டிப் பிணங்குன்றாக்கி ஆறாக இரத்தமோடச்செய்து அன்று வெற்றிபெற்று தன்னிருப்பிடத்திற்றுவந்து சேர்ந்தார். இப்படி அநேகதரம் சண்டைசெய்து மூஹம்மது ஹனிபாவை வெற்றிபெறாததால் ஷாஹே இறம் தன்னுடைய மந்திரிமார்களை அழைத்து நாம் எத்தனையோதரம் சண்டை செய்தோம். அதனால் அவனை வெட்டவுமில்லை பிடிக்கவுமில்லை. அதனால் நம்முடைய சேனைகளெல்லாம் அவன் கையின் கத்தியால் மாண்டு போனார்கள். இனிமேல் எதிர்த்தாலும் மற்றப் படைகளெல்லாம் மாண்டு போவார்கள். நாம் ஜெலிக்கப்போகிறதில்லை. ஆகையால் அவனோடெதிர்த்துச் சண்டைசெய்யாமல் உபாயத்தாலவனைப் பிடித்துக்கொள்ளவேண்டியது, அப்படிச்செய்யஆலோசனைச்சொல்லுங்களென்றுகேட்டான். அப்பொழுது மந்திரிமார்கள் ஓ பாதுஷாவே! எங்கள் மனதில் ஒரு யுக்தி பிறந்தது. அதென்னவெனில் சண்டைமைதானத்தில் சிலகிணறுகள்தோண்டி, அதன் பேரில் கழிகளைப்பரப்பி அதன்மேல் மண்ணைமூடிவிட்டுப் பின்பு நாம் அந்த மைதானில் நின்று சண்டைக்கு அழைத்தால் அவன் நமக்கருகில் ஓடிவருவான். அப்பொழுது அவன் கிணற்றிலாவது விழுந்து விடுவான். உடனே நாம் மண்ணைத் தள்ளி அக்கிணற்றை மூடிவிட்டால் உள்ளவே சிக்கிக்கொண்டு இறந்துவிடுவானென்று சொல்ல, அதை ராஜன் கேட்டு ஆம் இது நல்ல ஆலோசனை தானென்று ஒப்புக்கொண்டு உடனே கிணறுகளை வெட்டச் சொல்லி உத்தரவு கொடுத்தான். அப்படியே ஒரு கொடிக்குள்ளாக இராவிற்கிராவே கிணறுகள் வெட்டி தயார் செய்துவிட்டார்கள். பொழுது விடிந்தவுடனே அரசன் தன்னுடைய சேனைகளுடனே இரணக்கள மைதானில் வந்து அணி பணியாகப்படைகளைவகுத்து சமருக்கு அழைத்தார்கள். அப்பொழுது மூஹம்மது ஹனிபு இவர்கள் செய்து இருக்கிற சூதுகளொன்றுந்தெரியாமல் தன் வழக்கப்படி குதிரையின்மேலேறி சண்டைக்கு முன்னிலும் அதிக ஆரபாரத்தோடு போய்நின்றார். அந்நேரவேளையி லொருவன் மிகுந்த வல்லமையோடு வந்தெதிர்த்தான். அவனை மூஹம்மதனிபு வெட்டக் கத்தியை யெடுத்தார். அவன் பயந்து பின்னுக்கோடினான். அவனைத் துரத்திக்கொண்டே அக்கிணற்றின் கிட்டேபோகவும். குதிரை திகைத்து அவ்விடத்திலேயே நின்றுவிட்டது. அப்பொழுது மூஹம்மது ஹனிபு அந்தக் குதிரையின்மேல் அதிக கோபமாய் நல்ல சமயத்தில் மோசஞ் செய்கிறதேயென்று சாட்டியால் ஓரடி அடித்தார். அவ்வடியினால் அக்குதிரையெகிறிப்பாய்ந்தது எப்படியெனில், கிணறுகளைத் தப்படித்துத் தப்படித்து தாண்டிப் போகையில் காலாவது கிணற்றினுள்போய் விழுந்துவிட்டது. அதனால் மூஹம்மது ஹனிபுவுடைய இரண்டுகாலுமொடிந்து எலும்புகளெல்லாம் நெறுநெறுவென்று நொறுங்கிப்போய் விட்டது.

அக்கோவேளையில் பகைவர்களுடைய படைகளெல்லாம் அக்கிணற்றை வந்து வளைந்து சூழ்ந்து நின்று கொண்டார்கள். அப்பொழுது மந்திரி மார்களெல்லாம் அங்கேவந்து அதிக சந்தோஷத்தோடு இன்றோடு நம்முடைய விசனங்களும் பகைகளும் தொலைந்து விட்டது. நீங்கள்சீக்கிரமாகக்கிணற்றில்மண்ணைத்தள்ளி மூடிகிரவி விடுங்களென்று சொல்லிக்கொண்டிருக்கையில், அக்கோ வேளையிலே ஸைத்தூன் வந்து குலாமைப்பார்த்து எங்கே இமாமென்று அதட்டிக் கேட்கையில், குலாம் இப்படைகளெல்லாம் ஏகமாய் வந்து வளைந்துவிட அதனுள்புகுந்தாரே அது தானெனக்குத் தெரியும், மற்றொன்று மெனக்குத் தெரியாதென்று சொன்னான். அவன் சொன்னதை சைத்தூன் கேட்டு சீக்கிரமாகத் தன் குதிரையை நடத்திஏகமாகச்சூழ்ந்திருக்குங்கிணற்றுக்கிட்டே வரவும்,அப்போ தப்படைகளெல்லாம் ஸைத்தூன் வருவதைக்கண்டு பயந்து ஓடிப் போய்விட்டார்கள். அக்கோவேளையில் 40-பாந்திகளும் சைத்தூன் கிட்டே வந்து சேர்ந்தார்கள். அப்பொழுது சைத்தூன் குதிரையை விட்டுக் கீழே யிறங்கி அக்கிணற்றி னருகில் சென்று கிணற்றைக் குனிந்துபார்த்து ஓ இமாமே! நான் தங்களுடைய அடியாள். என் பேர் சைத்தூன். தாங்ளென்னமாயிருக்கிறீர். எனக்குத் தைரியம் வரும்படி தங்களுடைய சங்கதிகளைச் சொல்லென்று கூப்பிட்டுக் கேட்க, அந்தச் சத்தத்தை முஹம்மது ஹனிபு கேட்டு சைத்தூனென்றெண்ணி அப்போது முஹம்மது ஹனிபு, என்னுடைய இரண்டு கால்களுமொடிந்து எலும்புகளெல்லாம் நொருங்கிப்போயிருக்கிறது. என்னைச் சீக்கிரமாக வெளிபடுத்துமென்று கூப்பிட்டுச் சொன்னார். அந்த சத்தத்தைக் கேட்டவுடன் சைத்தூன் கேடயத்திற்குநாலுமூலையுங் கயறுகட்டி அக்கிணற்றினுள் விட்டுஇதன் பேரில் உங்களுக்கு உட்கார எப்படி சவுக்கியமாயிருக்கிறதோ அப்படிக் குந்திகொள்ளுமென்று சொல்ல, அப்போது முஹம்மது ஹனிபு இரண்டு அக்குள்ளுக்குள்ளாகக் கயிறுகளை அறப்பிடித்து அதன்பேரில் குந்திக்கொள்ளவும், அப்போது சைத்தூன் தன்னுடைய வல்லமை யெல்லாங்கூட்டிதூக்கிட கொஞ்சமும் அசையவுமில்லை. அதனால் சைத்தூன் அதிகவருத்தமுற்று,ஓ இமாமே !நான் என்னுடைய வல்லமை யெல்லாங்கூட்டி தங்களைமேலுக்குத் தூக்கிடில் தாங்களசையவுமில்லை. தட்டுஎழும்பவுமில்லையென்றுசொல்ல முஹம்மது ஹனிபுகேட்டு ஓ சைத்தூனே! உன்னுடன் நாற்பது பாந்தி பெண்களையுங் கூட்டிக்கொண்டு கலிமா ஓதி ஹக்த ஆலாவைப் புகழ்ந்து என்னை யெடுப்பீர்களாகில் நான் கறையேறுவேனென்று சொல்ல, அதைச் சைத்தூன் கேட்டு அப்படியே செய்து எடுக்கையில் இலேசாகக் கிணற்றைவிட்டு கரைவந்து சேர்ந்தார். அப்போது முஹம்மது ஹனிபாவை கட்டிலின்மேல் வைத்து குலாமின் வசம் ஒப்படைத்தாள். அப்பொழுது முஹம்மது ஹனிபு

ஹாவென்று ஒரு குளிர்ந்த பெருமூச்சு விட்டார். அதை சைத்தூன் கண்டு, ஓ இமாமே! தாங்கள் இபபடி குளிர்ந்த பெருமூச்சு விட்ட காரணமென்ன? அதையெனக்குத்தெரியச் சொல்லவே ணுமென்று விருப்புற்றுக் கேட்க, அதற்கு அமீர், என்னுடைய காலு இப்படியாய் விட்டது. என்னுடன் பிறந்தார் 4-பேரும் சிறையினுள்ளிருக்கிறார்கள். அவர்களை எவ்விதமாக வெளியில் கொண்டு வருவேனென்ற எண்ணத்தின் பெருமூச்சென்று சொன்னார். அதைச் சைத்தூன் கேட்டுநீங்கள் ஒன்றுக்கும் விசனப்பட வேண்டாம். நான் போய் அவர்களைக் கொண்டு வருகிறேனென்று சொல்லித் தான் தனியாகப் புறப்பட்டுஅப்பட்டணத்தினுட்போய் புகுந்தாள்.

வீதிகளெல்லாங்கடந்து கோட்டைக்குட் புகுந்து அவர்களை முன்னால் சிறையிலடைத்துவைத்த விடத்திற்போய்ப் பார்க்கையில் அங்கே அவர்களில்லை. பின்னும் மற்ற விடங்களெல்லாம் தேடிப் பார்க்கையில் எங்கேயுங் காணவில்லை அதன்பின்பு அவ்வூரார்களை விசாரித்து மவர்களு மின்னவிடத்தி லிருக்கிறார்களென்று சொல்லாமல் எங்களுக்குத் தெரியாதென்று சொல்லிவிட்டார்கள். அந்நேரவேளையில் பகைவரின் படைகள் வந்து முஹம்மது ஹனிபாவைச் சுற்றி வளைத்துகொண்டு சமீபத்தில் நெருங்கினார்கள். அப்போது முஹம்மது ஹனிபும் கூட 40-பந்திகளுமாகப் பகைவர் கிட்டே நெருங்கி வரவொட்டாமல் அம்புகளைப் பூட்டி அம்பொன்றுந் தப்பாமல் அநேகம்பேர்களை மடித்தார்கள். அந்த சமயத்தில் கைகளிலிருந்த அம்புகளெல்லாம் ஒன்றில்லாமல் முடிவாய் விட்டது. அதனால் மிகுந்த கவலை கொண்டிருந்தார்கள். அப்படிப்பட்ட இக்கட்டாகிய சமயத்தில் சைத்தூன் அதிகவேகமாய் ஆங்காரத்தோடு குதிரையின்மேல்வர அப்பகைவராகிய சேனையோர்களெல்லாம் கண்டு திடுக்கிட்டுப் பயந்து புலியைக்கண்ட மான்போல மிரண்டு ஓடிபோய் விட்டார்கள். அப்போது சைத்தூன் முஹம்மது ஹனிபாவின் கிட்டே வந்து, ஓ பாதுஷாவாகிய இமாமே! நான் பட்டணத்தினுள்ளேபோய் நகமுகந்தேடிப் பார்க்கையில் அவர்களிருக்கிறஇடத்தின் குறிப்பே யகப்படவில்லை. இன்னும் தேடிப்பார்க்கலாமெனில், உங்களைப்பகைவர்கள் வந்துஎன்ன செய்வார்களோவென்று சீக்கிரமாக நான் வருவதற்குள்ளாகத் தங்களைப் பகைவர்கள் வந்து வளைத்துக் கொண்டிருந்தார்கள். நான் வந்து அவர்களைத் துரத்தி விட்டேன். ஆகையால் தங்களுடைய உத்திரவாகுமேயானால் எந்த ஆருக்காவது தங்களைக் கொண்டு போய் வயித்தியர்களிடத்தில் காண்பித்து தங்கள் கைகால்களைச் சீர்படுத்தி தாங்கள் சொஸ்தமானதின் பின்பு நாம் இவ்விடத்திற்கு சண்டைக்கு வருவோமென்று சொல்ல, அதை முஹம்மது ஹனிபுகேட்டு நல்லது, நமக்குச் சமீபத்தில் இம்ருனுடைய தேச

மிருக்கின்றது. அவன் எனக்கு மிகுந்த இஷ்டமுள்ளவன், உதவி யொத்தாசை செய்வான். அங்கேயென்னை இக்கட்டிலோடு எடுத்துக்கொண்டு போவென்று சொல்ல, அதைச் சைத்தூன் கேட்டு நல்லதென்று சம்மதித்தாள்.

## சைத்தூன் முஹம்மது ஹனிபாவை இம்ரூனிடத்திற்குக் கொண்டு போகுதல்

முஹம்மதனிபாவின் சொல்லின்படி கட்டிலின்மேல் வைத்து இம்ரூனுடைய தேசத்திற்கு எடுத்துக்கொண்டு போகையில், அப்போது மக்பூரென்னும் மரசன்12,000 குதிரைப்படைகளை கூட்டி வந்து இம்ரூனுடன் சண்டைசெய்ய அவ்வூரினருகில் வந்துஇறங்கியிருக்கிறான். அவனை எதிர்த்துச் சண்டைசெய்ய இம்ரூனும் தன்னுடைய படையோடு எதிர்முகமாக நின்று இருவரும் படைகளை அணியணியாக நிறுத்தியிருக்குஞ் சமயத்தில் இம்ரூனைப் பார்த்து மக்பூர் என்பவன், நீ முஹம்மது என்பவருக்கு ஈமான் கொண்டு கலிமா ஓதி யிருக்கிறதாகக் கேள்விபட்டு நான் இன்று இப்படைகளுடன் உன்னுடன் சண்டை செய்ய வந்திருக்கிறேனென்று சொல்லி, நீயும் நானுமாக எதிர்த்துச் சண்டைசெய்து இருவர் வல்லமையுமறியவேணுமென்றுமுதலிலிருவர்கள் படையும் ஒன்றோடொன்றெதிர்த்து. மழை பொழிவதுபோல் அம்புகள் பொழிந்து தலைகளுருளவும், மூளைகள் சிதறவும், கத்தியாலும் தண்டாயுதத்தாலும் ஈட்டியாலும் குத்தியும் வெட்டியும் இரத்த ஆறு ஓடச்செய்து கடைசியில் இரண்டு ராஜாக்களும் முன்பேசியதுபோல ஒருவர்க்கொருவர் வானிடிபோல எதிர்த்துச் சண்டை செய்யும் வேளையில், மக்பூரென்பவன் இம்ரூனுடைய கழுத்தில் பாசக்கயிற்றைப்போட்டு இழக்க நாடினான்.

அப்போது இம்ரூன் ஹக்தஆலாவைப் புகழ்ந்து, ஒ நாயனே! இவ்வேளை நீ என்னைக் காத்துக்கொள்ளென்று துஆக்கேட்டான். அக்கோர வேளையில் அவ்விடம் சைத்தூனும் முஹம்மதனிபாவும் குலாமுமாக வந்து பார்க்கையில், இம்ரூனுக்கு இக்கட்டாகிய வேளையாயிருக்கின்றது. அதுகண்டுமுஹம்மதனிபு, ஆ ஆ இந்தத் தருணத்தில் என்னுடைய கால்களொடிந்து போயிருக்கின்றதே, நானென்ன செய்வேன். எனக்குவருத்தமும் பெரிதாயிருக்கின்றதே, வீணாக பகைவனுடைய கையிற்சிக்கி பரிதவிக்கிறானே, இவனிடத்திற்குப்போய் வியாதியைக் காப்பாற்றிக் கொள்ளலாமென்று நாடிவர, இங்கே இப்படிப்பட்ட முஸீபத்துண்டாயிருக்கிறதேயென்று அதிக விசனப்படுவதை சைத்தூன் கண்டு, ஒ இமாமே! நீங்கள் யாதொரு விசனப்பட வேண்டாம். தங்களுக்கு முஹபத்தாகிய

இம்ரூன் யாரோ எனக்குத் தெரியாதென்று சொல்ல, அதற்கு முஹம்மதனிபு யார் கழுத்தில் பாசக்கயிறிருக்கின்றதோ அவர் தான் இம்ரூன். எவனிழுக்கிறானோ அவனை வெட்டி விட்டு என்னுடைய இஷ்டனை விடுவித்து விட்டால் அதனால் என் மனம் மகிழ்ந்து நிலைப்படு மென்று சொல்ல, அது கேட்டு உடனே மின்னல் மின்னிளைப் போல சைத்தான் அங்கே வந்து இம்ரூனுடைய கழுத்தி லிருக்கும் கயிற்றை அறுத்துப் போட்டு அவனுயிரை மீட்டு விட்டுப் பகைவனாகிய மக்பூரை இரண்டு துண்டாக வெட்டி அவன் படைகளை யெல்லாம் நாசமாக்கி, அவனுடைய பண முதலிய ஆடை யாபரணங்களைக் கொள்ளையிட்டு வெற்றி பெற்ற பின்பு சைதூனும் இம்ரூன் பாதுஷாவும் முஹம்மது ஹனிபாவை வந்து கண்டு கால்க ளொடிந்திருப்பதைப் பார்த்து, பாதுஷா அதிக விசனப்பட்டு அழைத்துக் கொண்டு போய், நல்ல அலங்கிருதமான மெத்தைக் குள்ளே இருக்கும்படி செய்தும், உடனே அப்பட்டணத்தி னுள்ளிருக்கும் பண்டிதர்களை யெல்லாம் அழைத்து இக்கால்கள் கூடி சவுக்கியம் பெறும்படியாகச் செய்வீர்களாகில், உங்களுக்கு அளவற்ற பணங்களும் நாடுகளும் இனும் கொடுப்பேன். நன்றாய் பாருங்க ளென்று சொல்ல, வயித்தியர்கள் அச்சொல்லைக் கேட்டு ஒடிந்துபோன காலைப் பார்த்து, இது சுத்தி செய்ய எவ்வளவும் எங்களால் முடியாது. இதற்கு மருந்து எவ்வுலகத்திலு மில்லை யென்று சொல்லி விட்டார்கள்.

பின்பு, முஹம்மதனிபு அம்மெத்தையி னுள்ளிருந்து கால் நோயினால் சொல்ல முடியாத விசனமும் வருத்தமு மடைந்து தன் குலாமை யழைத்து நீயும் சைத்தானும் என் கிட்டே யிருக்க வேண்டாம். விலகி யிருங்களென்று சொல்ல, அச்செய்தியை குலாம் சைத்தானுக்குத் தெரியப்படுத்தவும், அப்பொழுது சைத்தான் முஹம்மதனிபாவின் கிட்டே வந்து, ஓ இமாமே! இங்கே துனியாவிலே யென்னை விலகி யிருக்கும் படியாகச் சொன்னீர்; உமக்கு என் பேரில் என்ன சந்தேக முண்டென்று சொல்ல, அதற்கு முஹம்மது ஹனிபு 2–நாழிகை வரைக்கும் நான் தனியா யிருக்க நாடுகிறேன். எனக்கு வருத்தம் பெரியதா யிருக்கின்றது. நீங்க ளெல்லாரும் விலகி யிருங்க ளென்று சொல்ல, அப்படியே சைத்தானும் குலாம மற்றவர்களும் மெத்தையினுள் தனியாக விட்டு விட்டு எல்லாரும் வெளியே வந்து விட்டார்கள். அதன் பின்பு, முஹம்மது ஹனிபு அதிக வருத்தத்தினால் ஹாஹாவென்று சததமிட்டுக் கொண்டு அம்மெத்தையி னுள்ளிருந்தார். அச்சமயத்தில் ஹரியாப்பரி சீக்கிரமாக வந்து அக்கட்டிலோடு முஹம்மது ஹனிபை ஒருவர் கண்ணுக்குத் தெரியாமல், தூக்கிக் கொண்டு தன் பட்டணங் கொண்டு போய் விட்டது.

அதன் பின்பு அம்மெத்தையி னுள்ளிருந்து வரும் சத்தமடங்கிப் போய் விட்டது. அதை சைத்தூன் கண்டு குலாமைப் பார்த்து, இதுவரைக்கும் வந்த சப்தம் கம்மென்று அடங்கிப் போயிற்றே. ஆகையால், சீக்கிரமாக நீ மெத்தையினுள் போய் இமாமுடைய சங்கதியைத் தெரிந்து வாவென்று செல்ல, உடனே குலாம் அம் மெத்தையினுள் புகுந்து பார்க்கையில் கட்டிலோடு இமாமைக் காணமல் கிடுகலங்கி மெய்மறந்து பெருங்கூரலிட்டு சத்தமிட்டழு தான்.

அந்தச் சத்தத்தைச் சைத்தூன் கேட்டு அதிக காபருபட்டு தானும் போய் பார்க்கையில், காணேம். அதனல் பெரிய அழுகை சத்தமாய் விட்டது பட்டண முழுவதும் ஏகக் கலக்க மாய் விட்டது. பின்பு சைத்தூன் 40-பாக்திகளேயும் கூப்பிட்டு உங்களே நான் விடுதலே செய்து விட்டேன். நீங்கள் உங்களுடைய வீடு போய்ச் சேருங்கள். நான் தனியாகக் காடு, மலே, வனம் வானந்திர மெல்லாந் திரிந்து அவரைக் கண்டு பிடித்து வருகிறேன். அப்படி யில்லா விட்டால் என்னுயிரை அவ்விடமே மடித்து விடுவேன். என் முகத்தைக் கொண்டு வரமாட்டே னென்று சொல்ல, அதற்கு குலாமும், நாம் மதீனத்திற்குப் போய் அவ்விட முள்ளோர்கள் தங்கள் பேரில் மிகுந்த இரக்கமும் பிரியமும் இஷ்ட முஞ் செய்வார்கள், இன்னும் முஹம்மது ஹனிபாவின் சங்கதி களும் தெரியுமென்று நானவிதமாகிய ஒப்புக ளெல்லாஞ் சொல்ல, அவைகளே யெல்லாங் கேட்டு சைத்தூனுக்கு அவ்விடம் போக மனஞ் சம்மதியானது. அப்பொழுது குலாம் முஹம்மது ஹனிபா வுடைய பாதரக்ஷைகளே யெடுத்துக் கொண்டு கூட சைத்தூனுந் தானுமாக இம்ரானிடத்தில் விடை பெற்றுக் கொண்டு மதீனத்தின் பாதையைப் பிடித்து வழிக ளெல்லாம் துலேத்து மதீனத்தினரு காக வந்து கபறஸ்தான் கிட்டே நின்று குலாமைப் பார்த்து, நா னிவ்விடமே யிருக்கிறேன். நீ பட்டணத்திற்குள் போய் அவ் விடத்தின் சங்கதிகளே முன்ன மறிந்து கொள். என்னே யவர்கள் முன்பின்னறியார்கள். என்னுடைய சங்கதிகளேச் சொல்ல, இதற் கவர்கள் ஒப்புவார்களாகில் நல்லது, ஒப்பாவிடில் என் பாக்கியம். நானிப்படியே எங்கேயாகிலும் புறப்பட்டுப் போய் விடுகிறேன். நீ முன்பின் அறிந்தவனென்று, சொல்லி அங்கோர் கபறின் கிட்டே போய் உட்கார்ந்து கொண்டார்கள்.

### மக்பூல் விசளம்போய்ச் சொல்லுதல்

அப்பொழுது குலாம் சைத்தூனேத் தனியாக விட்டு விட்டுத் தானும் தனியாகவே மதீனத்திற்குள் போய் புகுந்து இந்தச் சங்கதியைச் சொல்லவும் பெரிய கூச்சலாய் விட்டது. அப்பொழுது

இமாம் ஹஸனும், இமாம் ஹுஸைனுமாக வந்து குலாமைப் பார்த்து நீ எங்கே முஹம்மது ஹனிபாவை விட்டு விட்டு வந்து அழுகிறாய். அச்சங்கதிகளை யெங்களுக்குச் சொல்லென்று கேட்க, அதற்கு மக்பூல், ஓய் இமாம்களே! கானவரைத் தோற்று விட்டே னென்று ஆதியோடந்தமாகச் சொல்லி தான் அடையாளங்காட்டக் கொண்டு வந்த பாதரக்ஷையுங் காட்டி, இதை யுங்களுக்குச் சாட்சியாக காட்ட கொண்டு வந்தேனென்று சொல்ல, அதை அவ்விரண்டு பேருங் கேட்டு, அதிக வியாகூலத்தோடு அலி ரலியல்லாஹு அன்ஹு விடத்திற்குப் போய், மக்பூல் மூஹம்மது ஹனிபாவுடைய சங்கதிகளைக் கொண்டு வந்திருக்கிறான். இது அதிக விசனமுள்ளதென்று சொல்ல, அதைக் கேட்டவுடனே அலி றலியல்லாஹு அன்ஹு ஹா வென்றொரு சத்த மிட்டார். அதனால் மதீன மெல்லாம் ஒரே சத்தமாய் விட்டது, இன்று அலி ரலியல்லாவின் பேரில் பெரிய முஸீபத்து வந்து நேரிட்டதென்று எல்லா அஸ்ஹாபுமார்களும் வந்து அலி ரலியல்லாஹ்வை வினவினார்கள். யா அலியே! நீங்கள் கேட்டபடியே எங்களுக்கும் தெரிய சொல்லுமென, அப்பொழுது அலி றலியல்லாஹு மக்பூலானவனைக் கேளுங்க ளென்று சொல்ல, அன்று எல்லா அஸ்ஹாபிமார்களுங் கேட்டு அந்த குலாமைப் பார்த்து மூஹம்மது ஹனிபு எங்கே யென்று கேட்டார்கள். அதற்கவன் ஆதியோடந்தமாகச் சகல சங்கதிகளுந் தெரியும் படி சொல்லினான். அவன் சொல்லியதை சகல அஸ்ஹாபிமார்களுங் கேட்டு அதிக விசனக்கடலினுள் மூழ்கினார்கள். அந்தக் காலம் உமர் றலியல்லாவுடைய கலீபர பட்டத்தின் காளா யிருந்தது. அப்போது உமறிபுனு கத்தாபு அலியாரைப் பார்த்து நீர் ஒன்றுக்கும் விசனப்பட வேண்டாம். உன்னுடைய பிள்ளை மவுத்தாக வில்லை. அவர் உயிரோடு இருக்கிறார். ஆகையால், நீ சீக்கிரமாக ஸர்வரே ஆலம் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமுடைய றவுலா ஷரீபினிடத்திற்குப் போய்க் கேட்பீராகில், உமக்கு அதின் சங்கதிகளை அறிவிப்பார்கள். அதனால் அறிந்து கொள்வீரென்று சொல்ல, உடனே அலி றலியல்லாஹு தன் தோழன்மார்களின் கூட நபி நாயகத்தின் றவுலாவின் கிட்டே வந்து இஸ்திக்பார் செய்ய அதனால் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் பஷாறத்துச் செய்தார்கள். அதன் விபரமாவது :—" ஓ அலியே! உன்னுடைய பிள்ளை முஹம்மது ஹனிபு மவுத்தாகவில்லை. அவர் இது வரைக்கும் உயிரோடிருக்கிறார். அவரை ஷாயாபரியுடைய மகள் ஹரியாபரி என்பவள் கடலிற்கு அப்புறமாகத் தூக்கிக் கொண்டு போய்த் தன்னிருப்பிடத்தில் வைத்திருக்கிறாள். இன்னும் மக்பூலானவன் தன்கூட ஸைத்தூனையு மழைத்து வந்திருக்கிறான். இன்னும் நீ உன்னுடைய பிள்ளைகளிரண்டு பேரையுங் கூட உமறையும் அழைத்துக்கொண்டு

12,000 அஸ்ஹாபுகளேயும் படையாகச் சேர்த்து சமுத்திரத்தின் கரையோரமாகச் சென்று முஹம்மது ஹனிபாவை மீட்டுக் கொண்டு வாரும், இன்னும் சைத்தூனுக்கு முஹம்மதனிபாவுடைய கத்தியையுங் கொடும். இன்னும் சைத்தூனுக்குப் பெட்டி நிரம்ப ஆடையாபரணங்களே நிரப்பிக்கொடும். இன்னுமவருடைய கூடாரத்தையும் கொடும். இன்னும் நீ அங்குப்போய்வர 7-வருடம் பிடிக்கும் அல்லாஹு தஆலா அங்கே உங்களைக் கொண்டு போய்ச் சேர்ப்பான். அங்குபோய் ஷாயாபரி யிடத்திற்குப் போனால் அப்போது ஸைத்தூனுக்கு பெண்களின் உடைகளே உடுத்து நானுவித நகைகளே யிட்டு மிகுந்த அலங்காரஞ் செய்து அவன் முன் போகும்போது தலையைத் திறந்தாப்போல் போகச் சொல்லும். அப்போது அவ்வரசன் ஸைத்தூனைப் பார்த்து, நீ ஏனிப்படி வந்தாய்? உன் தலையை மறைக்குந்துப்பட்டி யெங்கே? என்று கேட்பான். அப்பொழுது அவ்வரசனுக்கு என்னுடைய துப்பட்டி உன்னுடைய வீட்டிலிருக்கிறதென்று சொல்லச் சொல்லும். அதுகேட்டு உன்னுடைய துப்பட்டி என் வீட்டிற்கு வரவேண்டிய காரணமென்ன வென்று கேட்பான். அதற்கு நீ சொல்லும், என்னுடைய புருஷனே உன்மகள் கொண்டு வந்து வீட்டில் வைத்திருக்கிருளென்று சொல். அச்சங்கதி கேட்ட வுடனே ஷாயாபரி மகளே யழைத்து உன் புருஷனுகிய முஹம்மது ஹனிபை உன்னிடத்தில் கொடுத்துவிடுவானென்று சொன்னார்."

இச்சேதிகளே யெல்லாம் சர்வரே ஆலம் நபி ஸல்லல்லாஹு அலேஹிவஸல்லமுடைய கிருபையினுல் அலிறலியல்லாஹு அறிந்து கொண்டு மிகுந்த சந்தோஷத்தோடு மக்பூலே தன்னுடனழைத்துக் கொண்டு ஸைதூனைத்தேடி வருகையில், கபுறல்தானிடமாக ஸைத் தூன் உட்கார்ந்திருந்து முஹம்மது ஹனிபாவின் பேரில் எண்ண மிட்டிருக்கக்கண்டு அலிறலியல்லாஹு கிட்டேபோய் மிகுந்த கிரு பையுடன் ஸைத்தூனுடைய தலையின்பேரில் தங்களின் முபாறக்கா கிய கையைவைத்துத் தடவி, ஸர்வரே ஆலம் தங்களுக்குத் தெரி வித்த சங்கதிகளெல்லாம் ஆதியோடந்தமாகச் சொல்லி மனதை தேற்றிட, அவைகளே ஸைத்தூன்கேட்டு துக்கங்களேயெல்லாம் நீக்கி அதிக சந்தோஷங்கொண்டு ஹக்குதஆலாவினுடைய பேரில் ஷுக்கூர் செய்தார்கள். பின்பு அலி றலியல்லாஹு 2 கோசில் கூடார மடிக்கும்படி உத்தரவு செய்தார்கள். அதேபடி கூடார மடித்து விலேபொருந்திய பனுத்து முதலியவை விரித்து சிங்காரித் தார்கள் அப்பொழுது ஸைத்தூன் அலிபுலியாரிடத்தில் விடை பெற்றுக் கொண்டு அக்கூடாரத்தினுள் வந்திறங்கியிருந்தார்கள். பின்பு அஸ்ஹாபுமார்களெல்லாம் கூடாரத்திற்கு காவலாக விருந் தார்கள். கூட உமறென்பவர் வாசக்காரராக ஒருவரையும் உள்ளே

போகவொட்டாமல் காவற்காரராயிருந்தார். இப்படியிருக்கையில், ஸைத்தூனோடு சந்திக்க, அலிறலியல்லாஹு வினுடைய குமாரர்கள் உமறலியும், தாலீபலியும் அந்தக் கூடாரத்தின்னருகில் வந்து உள்ளே நுழையப் போனார்கள். அப்போது காவற்காரராகிய உமர் எங்கே போகிறீர்களென, அதற்கவர்கள் நாங்களிருவரும் உள்ளே போகிறோமென்று சொல்ல, அதற்கு நீங்கள் உள்ளே போக உத்திரவில்லாமல் உள்ளே போகக்கூடாதென, அதற்கவர்கள் நாங்கள் ஸைத்தூனுடைய கொழுந்தன்மாரா யிருக்கிறோம். எங்களுக்கும் அவர்களுக்கும் யாதொரு மறைவுமில்லை. நீயேன் தடுக்கிறாயென்று சொல்ல, உமர் ஸைத்தூனுடைய உத்திரவின்றி நீங்கள் உள்ளே போகக் கூடாதென்று வெளியே நிறுத்தி விட்டு ஸைத்தூனிடத்திற்கு போய் தங்களைக்காண அலியாருடையபிள்ளைகள் வந்திருக்கிறார்கள். அவர்களை உள்ளே விடத்தாங்களுத்திரவானால் விடுகிறேனென்று சொல்ல, அச்சேதி கேட்டவுடனே ஸைத்தூன் அவர்களை உள்ளே வரும்படி உத்திரவுகொடுக்க, உடனே உமர்போய் அவர்களைப் பார்த்து, உள்ளே வரும்படி உத்திரவாயிற்று: நீங்கள் போங்களென்று விட்டு விட்டார். இவ்விரண்டு பேரும் கூடாரத்தினுட்சென்று ஸைத்தூனைக்கண்டு சாலஞ்சொல்லினார்கள். உடனே ஸைத்தூன் அவர்கள் ஸலாமுக்கு ஜவாபுச் சொல்லி அதிக மருவுடனே அவர்களை உட்காரவைத்து, நானாவிதமாகிய பேச்சுகளெல்லாம் கொழுந்தன்மாருடனே இராவெல்லாம் பேசியிருந்தார்கள். அப்பொழுது பஜர் வெள்ளையாய் விட்டது. இரண்டுபேரும் கூடாரத்தை விட்டு வெளியே வந்து விட்டார்கள்.

## அலிறலியல்லாஹு முஹம்மது ஹனிபை மீட்குதல்.

பொழுது விடிந்தவுடனே, அலிறலியல்லாஹு முஹம்மதனிபைக் கொண்டுவருவதற்காக, 12,000-குதிரையுடனே அஸ்ஹாபுமார்களைக் கூட்டிக்கொண்டு சில நாள் வரைக்கும் சமுத்திரக்கரையோரமாக நடந்து போகையில், அங்கே ஒரு பெரிய கோட்டையும் பட்டணமுமாக வாசற்படியும் தெரியலானது. அதைக் கண்டு கிட்டேபோய்க் கொண்டிருந்தார்கள். அப்படிபட்டசமயத்தில் அரசன் காவலாக வைத்திருந்த காவற்காரன் கோட்டையின் மேலிருந்து யார்வருகிறார்களோவென்று பார்த்து அரசனுக்கு அறிக்கைசெய்கிறது. அதிலொரு காவற்காரன் அறபு திசையாகப் பார்த்தான். அப்பொழுது, அவன் கண்ணுக்கு இப்படைகள் வருகிறது தெரியலாயிற்று. அதை நன்றாய் யுற்றுபார்த்து,, கைகால் நடுக்கமோடு பயந்து கோட்டையை விட்டுக் கீழேயிறங்கி (மீஆதென்னும்) அரசனிடத்திற்போய் ஓ இராஜனே! இன்று நானொரு புதுமையைக்கண்டேன். அதென்னவெனில், இருந்தாப் போலிருந்து அறபுதேசத்தின் புறமாக பெரிய தூசியெழும்பினது. அதை

கான் உற்றுப்பார்க்கும்போது 12,000-குதிரையுடனே மதீனத்தின் புறமாயிருந்து வருகிறார்கள், அவர்கள் பிடித்துவரும் கொடியைப் பார்த்தால் இஸ்லாமானவர்களாக மதீனத்தார்கள் போலிருக்கிறது. அவர்கள் வருகிற ஆரபார அமளிகளை இவ்வளவென்று சொல்ல என்னா லவ்வளவு முடியாதென்று சொன்னான்.

அலங்காரக்கண்ணி

அந்தசொல்லைக் காதிலேகேட்டான் மீ ஆதுராஜன்
அப்படிபாஷா கம்மோடெதிர்க்க அறபுடையார்க்கு
இத்தனையா ணுவங் கொண்டாரல்லவா அறபுதேசத்தார்கள்
பஞ்சைகளெல்லாங் கூடியேவந்தார் பாரசண்டைசெய்ய
பேடிகளெல்லாங் கூடியேவந்தார் பெரிய சண்டைசெய்ய
பஞ்சைப்போல் பறப்பாரெல்லாம் பிடித்தால் கான் கத்தி
புலிகளெதிர்த்து என்னோடு சண்டை போட்டிடமாட்டாது
யானைகளெதிர்த்து என்னோடு சண்டை யதுவுஞ்செய்யாது
பூனையையெலிகள் கெலிப்பதுபோல பேடிகள் வந்தார்கள்
கரியைக் கோழிகள் வெல்வதுபோல காடியே வந்தார்கள்
புலியைமான்கள் வெல்வதுபோலப் பேயர்வந்தார்கள்
கெட்டிக்கார ராஜாராயிருந்தால் என்னோடெதிர்க்கவேணும்
சேவகபடைகளாகவேயிருந்தால் என்னோடெதிர்க்கவேணும்
சிப்பாயிப்படைகளாகவேயிருந்தால் என்னைக்கெலிக்கவேணும்
மீசைமுளைத்தப் பேர்களாயிருந்தால் முன்னால் நிற்கவேணும்
என்னைவெல்ல உலகினிலுண்டா என்றான் ராஜாவும்
பல்லை நெறநெற வென்றுகடித்தான் பாராராஜாவும்
நெல்லைக்கொரிப்பது போலக்கொரித்தான் நெடியராஜாவும்
நல்லதுநல்லது பார்ப்போமென்றான் ராஜாமீஆது
அந்தவேளையி லென்னசொல்கிறான் ராஜாமீஆது
நம்முடையபடைகளைக் கூட்டுங்களென்றான் ராஜாமீஆது
கோட்டைக்குவெளியே போங்களென்றான் ராஜாமீஆது
ஈட்டிகத்திக ளெடுங்களென்றான் ராஜாமீஆது
அம்புதண்டங்க ளெடுங்களென்றான் ராஜாமீஆது
பட்டாகத்திக ளெடுத்துபிடியுங்கள் பாரசண்டைசெய்ய
அந்தசொல்லைக் காதிலேகேட்டு அப்போபடைவீரர்
ஆயுதமெல்லா பூட்டியெழுந்தா ராங்காரங்கொண்டு
கோட்டையவிட்டு வெளியிலே வந்தார் கொடியபாவியோர்கள்
அணியணியாக வந்து நின்றார்கள் ஆங்காரங்கொண்டு
முப்பதுமுழ முயரமுள்ளான் மீஆதுராஜன்
வெங்கலம்போல சரீர முள்ளான் மீஆது ராஜன்
சிங்கம்போல ஆணவமுள்ளான் மீஆதுராஜன்
ஆயுதமெல்லாம் பூட்டியெழுந்தான் ஆணுவமிகப்பேசி

மந்திரிமார்கள் சூழ்ந்திடவந்தான் மீஆதுராஜன்
பின்னணியாகவே வந்து நின்றான் பெரியசிங்கராஜன்
அந்தவேளையில் அசுஹாபுமார்களும் அணியணியாகநின்றார்
ராஜன்படையிலிருந்தவீரன் ராஜாபுலிபோல
சிப்பாய்மார்களே வாங்கள் சண்டைக்கு சீக்கிரமென் முன்னால்
சேவகமார்களே வாங்கள் சண்டைக்கு சீக்கிரமாகவிப்போ
உங்கள்வலுவைக் காட்டிட வாங்கள் ஒளித்துக்கொள்ளாமல்
இப்படிச்சொல்லி சண்டைக்கழைத்தான் எதிராளிவீரன்
அந்தச்சொல்லைக் காதிலேகேட்டார் அசுஹாபுமாரெல்லாம்
அப்போஸைத்தூன் ஆங்காரங்கொண்டு அவனை வெட்டி தள்ளி
குதிரைமேலேறக் கண்டாறப்போ கொடிய சிங்கவீரர்
அலியார்பிள்ளை தாலிபுலியும் அந்நேரவேளையிலே
பெண்கள் சண்டைக்குபோவது நமக்கு பெரியஞாயமல்ல
நான்போயவனைக் கெலித்துவருகிறேன் நடக்கநீவேண்டாம்
என்றசொல்லைக் காதிலேகேட்டு அப்போ ஸைத்தூனும்
புலியேகேளும் என்றன் சொல்லைப் போனால்சண்டைக்கு
ஒரேவெட்டாய் வெட்டியெறிந்திடும் ஒன்றும்பாராமல்
அந்தச்சொல்லைக் காதிலேகேட்டு அப்போதாலிபலி
காற்றைப்போல குதிரையை விட்டார் கடுங்கோபங்கொண்டு
பெரியசிங்கம்போ லெதிரில்வருவதைக் கண்டான் ரணசூரன்
தண்டாயுதத்தா லடித்தானவரைக் கனத்த இடிபோல
அந்தவடியைத்தாங்கி அடித்தார் ஆங்காரங்கொண்டு
குதிரையுமவனுங் கிறுகிறுவென்று கீழேவிழுந்துசெத்தான்
பின்னுமொருவன் வந்தெதிர்த்தான் பெரியபுலிபோல
இடியுமிடியு மெதித்தார்போல விழுந்தாரப்போது
ஒருவருக்கொருவர் ஆங்காரங்கொண்டு உருவினார்கத்தி
தாலிபலியார் வெட்டத்துண்டாய்த் தரைமேல் விழுந்துசெத்தான்
இப்படி கணக்கில்லாதவீரர்கள் வெட்டுண்டுமாண்டார்
தாலிப் அலிமுன் னெதிர்க்கப்பயந்தார் சகலபடையாரும்
கிட்டே நெருங்கப் பயந்தெல்லோரும் கிடுகலங்கிபோனார்
ஆறாய்இரத்த மோடிபோச்சுது அந்நேரவேளையிலே.

வசனம்.

இவ்விதமாக தாலிபு அலி கணக்கில்லாத வீரர்களையும், படைகளையும் வெட்டக்கண்டு உடனே மீஆதென்னு மரசன் ஆங்காரங்கொண்டுகுதிரையின்மேலேறி வந்துநின்று என்னுடைய வீரர்களையும் சூரர்களையும் வெட்டிமாய்த்தவனே, என்னுடன்சண்டைசெய்யவாவென்று கூப்பிட்டான். அந்தச்சொல்லைக் கேட்டவுடனே தாலிபபெரும்புலிபோற்சீறி அவன்முன் போயெதிர்க்க, அப்பொழுது மீஆதென்னும் அரசன் கோடையிடிபோல் தன் கத்தியினால் ஓங்கி

வெட்ட அவ்வெட்டு தாலிபலியின் தலையிற்பட்டு பெருத்த காய மாய் கிறுகிறுப்பாகிய சமயத்தில் உமறென்பவர் ஓடி தாலிபலியின் சமீபத்தில் போய் குதிரையின் கடிவாளத்தைப் பிடித்து குதிரை யோடு தாலிபலியைத் தன் சேனையில் கொண்டுவந்து சேர்த்துவிட் டார். அப்போது அதைக்கண்ட சைத்தூனுக்கு மட்டிலடங்காத கோபமெழும்பிப் பல்லை நெறநெற வென்று கடித்து கடுங்கோபங் கொண்டு கண்கள் சிவந்து மிகுந்தஆரவாரத்தோடுமீஆதுக்குமுன் னாகச்சென்று நிற்க, அப்போது மீஆது நீ யார், உன்பெயரென்ன? சொல்லென்று கேட்டான். அதற்குச் சைத்தூன் என் பெயர் முஹம்மது ஹனிபு; நான்மதீனத்திலிருந்துவருகிறேன். ஆகை யால், உன்னுடைய ஆசையெல்லாந்தீர என்னுடன் சண்டை செய் யென்றும் மறைத்து வைக்கவேண்டாமென்றும் சொல்ல அதைக் கேட்டு மீஆது தன்னுடைய கத்தியை சுற்றி கோடையிடிபோல் கெர்ஜித்து ஓங்கிவெட்டினான். அவ்வெட்டை சைத்தூன் தன்கை யிலிருந்து கேடயத்தினால்தாங்கிக்கொண்டான். அதனாலவன்கத்தி முறிந்து துண்டுதுண்டாய்க் கைபிடிமாத்திரம் கையில் நின்றுவிட் டது. அதையும் ஆங்காரத்தோடு வீசியெறிந்தான். அது கீழே விழுந்தது. அதை உமர் ஓடிபோய் யெடுத்தார். அப்பொழுது மீஆது உமரைப்பார்த்து கால் நடையுள்ளவனே! நீயேன் கத்திப் பிடியையெடுத்தாய். அதில் விலைமதிக்க வொண்ணாதநவரத்தினங் கள் பதித்திருக்கிறேனென்று சொல்ல, அதற்கு உமர் கீழேயிருந்த தெல்லாம் என்னுடைய சொத்தாயிருக்கு மென்று சொன்னார். அப்போது சைத்தூன் மீஆதைப்பார்த்து நீ குதிரையை விட்டுக் கீழேயிறங்கி என்னுடன் மல்அமர் செய்யென்று சொல்ல, அது கேட்டு அவன் குதிரையைவிட்டுக் கீழேயிறங்கினான். சைத்தூனும் குதிரையைவிட்டுக் கீழேயிறங்கினார்கள். அங்கே யிரண்டுபேரும் மல்லமர் செய்தார்கள். அப்போது சைத்தூன் மீஆதை தூக்கிக் கீழேபோட்டு அவன் மார்மேல் குதந்தி கத்தியைக் கையில் வாங்கிக் கழுத்தின் பேரில் வைத்து மீஆதே! நீ இப்போது கலிமா ஓதுவா யாகில் உன் உயிரைக்கொண்டு மீந்து போவாய், இன்னும் சுவர்க்க வாதியுமாவாய்; இல்லாவிடில் உன்னுயிரையுமிழந்துநரகவாதியாய் போவாயென்று சொல்ல அதற்கு மீஆது உன்னுடைய தீதாரைக் காண ஆசைகொண்டவனா யிருக்கிறேன். ஆகையால் நான் சந் திக்க தாங்கள் முகத்தை காண்பிக்கவேணும. இன்னும் தங்களு டைய வல்லமைப்போல் வல்லமையுடையவர்களை இதுவரையில் ஒருவரையாவது நான் கண்டதில்லையென்று சொல்ல, அதற்குச் சைத்தூன் நானொரு வேலையாகப்போகிறேன். அவ்வேலையைமுடித் துக்கொண்டு நான் திரும்பி வரும்போது, இவ்விடம் வந்து போவேன். அப்போது என்னுடைய தீதாரைக் காண்பிப்பேன். அப்போது நீ சந்திப்பாய். இப்போது நீ சீக்கிரமாக நபி ஸல்லல்

லாஹு அலைஹி வஸல்லத்திற்கு ஈமான் கொண்டு கலிமா ஓதி இஸ்லாமாக வேண்டுமென்று சொன்னார். பின்பு இஸ்லாமாகி மீஆது அதிக இன்பத்தோடு நவரத்தினங்களையும், பணக்காசுகளை யும் தட்டுகளிலே நிரப்பியெடுத்துக்கொண்டு வந்து காணிக்கையாக ஸைத்தூனெதிரில் வைத்து மிகுந்த வணக்கத்துடனே கைகட்டி நிற்க அப்போது சைத்தூன் மீஆதைப் பார்த்து இப்போது இவை களி லொன்றையும் நானெடுக்கிறதில்லை. இவைக ளெனக்கு வேண்டியதுமில்லை. ஆனால் நான் போய் திரும்பி வரும்போது இவைகளை யெல்லாம் ஒப்புக் கொள்ளுகிறேன். நீ ஒன்றுக்கும் விசனப்படாதே. சுகமாக மகிழ்ச்சியோடு உன் கோட்டைக்குள்ளே போய் ஹக்தஆலாவை மறக்காமலும், தீனை விடாமலும் சீமையை ஆண்டுக் கொண்டிருவென்று சொன்னார்கள்.

அப்போது மீஆது ஓ பாதுஷாவே! இன்னொரு விண்ணப்ப மிருக்கிறது. அதையுங் காது கொடுத்து கேட்டு உதவி செய்ய வேணுமென்று சொல்ல அதற்குச் சைத்தூன் அதென்ன சங்கதி சொல்லு மென்று கேட்டார்கள். அப்போது மீஆது சொல்லத் தொடங்கினார். தொராச னென்று ஒரு பெரிய ராஜனிருக்கிறான், இன்னமவன் அளவற்ற படைகளையும் அதிக வல்லமையுமுடைய வன், இன்னும் 40 கெஜம் உயர முள்ளவன், அவன் இவ்விடத் திற்கு வருடா வருடம் தப்பாமல் படை யெடுத்து சண்டை செய்து அநேகம் பேரைச் சேதப்படுத்தி என்னையும் வருத்தஞ் செய்து கொல்லாமல் விட்டு விட்டுப் போகிறான். அவன் நான் இஸ்லாமாகிய சங்கதியைக் கேள்விப்படுவானாகில் என்னை உயிரோடு விட்மாட்டா னென்று சொல்ல, அதை ஸைத்தூன் கேட்டு நீ ஒன்றுக்கு மஞ் சாதே, இப்போதே அவன் பேரில் யுத்தத்திற்குப் புறப்படு. நாமெல் லோரும் அங்கு போய் அவனையும் இஸ்லாமாக்குவோ மென்று சொல்ல அதைக் கேட்டு மீஆது தன்னுடைய சேனைகளை யெல்லாம் நடத்தி வெளியே வந்தார். கூட அறபிகளும் புறப்பட்டு மலை வனாந்திரங்களைக் கடந்து தோராஜாவின் பட்டணத்திற்குச் சமீப மாகப் போனார்கள் அப்பொழுது தோராஜன் தன்னுடன் சண்டை செய்ய மீஆது தன்னுடைய படைகளுடன் தனக் குதவியாக இஸ்லாமான 12,000 குதிரை வீரர்களுடன் வருகிறானென்று தூதர்கள் ஓடிப்போய் அரசனுக்குச் சொல்ல, அந்த சங்கதியைத் தோராஜன் கேட்டு கோபமானான்.

## அலங்காரக்கண்ணி.

அந்தசொல்லைக் காதிலேகேட்டான் ஆங்கார தோராஜன்
ஆஹாவென்று கோபங்கொண்டான் அண்ணல்தோராஜன்
கண்களிரண்டுஞ் சிவந்து போச்சுது எட்டிக்கனிபோல

விழிகளிரண்டுஞ் சிவந்து போச்சுது முருக்கமலர்போல
மீசை படபடவென்று துடித்தது ராஜாவுக்கானாலும்
பல்லைகெறகெற வென்றுகடித்தான் பெரியதோராஜன்
கண்ணையுருட்டிப் பார்த்தானையா கடுங்கோபங்கொண்டு
மந்திரிமார்கள் மற்றுமுள்ளோர்கள் பார்க்கத்தோராஜன்
கிடுகிடு வென்று நடுங்கினர்ராஜன் கிட்டேயிருந்தோர்கள்.
மென்மேலாகக் கோபம்பொங்குது ராஜாவுக்கானாலும்.
தருமஞ்செய்யக் கருமம்வந்தது என்றான்ராஜாவும்
(அப்போ) வெட்டிப்போட்டால் நம்முடன் சண்டைக்கு வருவானாஇப்போ
விட்டபடியால் வந்தான் சண்டைக்கு வேறுபடைக் கூட்டி
ஆனலாகட்டுங் குறையொன்றுமில்லை யறிவோமவன் சண்டை
எத்தனைதரமோ அடித்தேனவனை யெல்லாமறந்து போனான்
சண்டைசெய்ய வலுவில்லாமல் தைரியமில்லாமல்
இஸ்லாம்படையைக்கூட்டியே வந்தான் என்னுடன் சண்டைசெய்ய
பஞ்சுபஞ்சாகப் பறக்கடிப்பேன் பாருங்களெல்லோரும்
பஞ்சைப்போல் பறக்கடிப்பேன் பாருங்களெல்லோரும்
தூசியைப்போலப் பறக்கடிப்பேன் துண்டுதுண்டாக
மீசைமுளைத்தவனாகவிருந்தால் முன்னே வந்திடுவான்
பேடிப்போல விருப்பானாகில் பின்னாலோடிடுவான்
என்னைக்கெலிக்க வந்தானானால் இப்போதேவருவான்
இப்படிநானா விதமாக சொன்னான் இடிபோல் தோராஜன்
மந்திரிமார்களே நம்முடைய படைகளைத் தயாருசெய்திடுங்கள்
குதிரைப்படைகளைச் சண்டைக்குப்போகக் கூட்டமாக்குங்கள்
ஜெயபேரிகையை யானைமேல்வைத்து தெருவெல்லாமடியுங்கள்
என்றசொல்லைக் காதிலே கேட்டு எல்லாமந்திரிமாரும்
உடனேபடைகளைத் தயாருசெய்தார் உக்ரசண்டை செய்ய
கத்திகட்டாரி பூட்டினாரெல்லாங் கடுங்கோபங்கொண்டு
அம்புமெடுத்தார் தண்டமெடுத்தார் ஆங்காரங்கொண்டு
குதிரைமேலே வந்தாரெல்லாம் பெரிய கூட்டமாக
கோட்டையைவிட்டு வெளியேவந்தார் கோடிபடையாக
யானைமேலேறி வந்தான் ராஜன் ஆயுதந்தான்பூட்டி
அணியணியாக நின்றாரெல்லாம் ஆங்காரங்கொண்டு
இவர்களுமணியாய் நின்றாரெல்லாம் எதிர்த்து சண்டைசெய்ய
எதிர்ப்படையி லிருந்தொருவீரன் வந்தான் புலிபோல
மைதானிநின்று கூப்பிட்டுச்சொன்னான் வாங்கள் சண்டைக்கு
சிப்பாய்மார்களாயிருந்தாலென்முன் சண்டைக்குவாங்கள்
சேவகமார்களா யிருந்தாலென்முன் சண்டைக்குவாங்கள்
மீசைமுளைத்த ஆண்பிள்ளையானால் வரலாஞ் சண்டைக்கு
பேடிகளாயிருந்தால் திரும்பிப் பேசாமற்போங்கள்
என்றசொல்லைக் காதிலே கேட்டு எழுந்தார் மீஆது

உத்திரவுபெற்றுப் போனர் சண்டைக்கு உறுமிச் சிங்கம்போல
பூமியதிர்த்திடப் போனர் சண்டைக்கு பெரிய புலிப்போல
வெட்டினர் துண்டாய் விழுந்தான் பாவி வீரியம்பேசிவந்தோன்
வந்தபேர்களை யெல்லாம்வெட்டினர் மீஆதுராஜா
கத்தியையெடுத்துப் படைக்குள்புகுந்தார் கனத்தஇடிபோல
ஆருயோடிப் போச்சுதுரத்தம் அந்தச்சண்டையிலே
குப்பல்குப்பலா விழுந்தார் ஜனங்கள் ஹாஐ ஹாஐ ஹாஐவென்று
அந்தவேளையி லெனனசெய்தான் அந்ததேராஜன்
படைகள்சேத மாவதைக் கண்டான் பெரிய தேராஜன்
கண்கள்சிவந்து போச்சுது அப்போது கனத்தராஜாவுக்கு
யானைமேலேறி வந்தானங்கே யாளிப்போல் ராஜன்

வ ச ன ம்.

தேராஜன் ஆங்காரத்தோடு வருவதை மீஆதுராஜா கண்டு, பயந்து இவனோடெதிர்க்க நம்மால் முடியாதென்று பின்னோடி வந்து சைத்தூனைக் கண்டு, இதோ யானையின் பேரில் வருகிறானே இவன் தான் தேராஜன். இவன் மகா கெட்டிக்காரன். இவனை வெல்வது மகா அருமை யென்று சொல்ல, அப்போது ஸைத்தூன் தன் குதிரைமேலேறி அவனோடெதிர்த்தார்கள். அப்பொழுது தேராஜன் ஸைத்தூனைக் கண்டு. தன்னுடைய யானையை தண்டாலடித்தான். அவ்வடியினல் யானை தன் தலையை மேலுக்குத் தூக்கி துதிக்கையை நீட்டினது. அப்போது ஸைத்தூன் அதன் துதிக்கையைப் பிடித்து உரமாக இழுக்கையில் யானை குப்புறவாகக் கீழே முட்டிமோதி விழுந்தது. அப்போது தேராஜன் கீழே விழுந்து எழுந்து கால் நடையாய் விட்டான். அப்போது ஸைத்தூன் தன் குதிரையை விட்டுக் கீழே யிறங்கி இரண்டு பேரும் மல்லமர்கள் புரிந்தார்கள். ஒருவர்க் கொருவர் கீழே தள்ளி வலிகள் செய்யுமளவில் சைத்தூன் தேராஜாவைக் கீழே தள்ளி அவன் மாரின்மேலேறி உட்கார்ந்து கொண்டு அவனை நோக்கி, நீ சீக்கிரமாகக் கலிமா ஓதுவாயேயானல் உன்னுயிர் மீளும், இல்லாவிடில் உன் தலையை அறுத்து விடுவேனென்று சொல்ல, அது கேட்டு தேராஜன் தங்களுடைய நாமத்தைச் சொல்லும். இன்னும் உங்களுடைய வனத்தையுங் காண்பிக்க வேண்டுமென்று கேட்க, அதற்கு ஸைத்தூன் என் பெயர் மூஹம்மது ஹனிபு, என்று சொல்லிப் பின்னும் நான் இப்பொழுது ஒரு வேலையைக் குறித்துக் கடற்கரை யோரமாகப் போகிறேன். அவ்வேலையை முடித்துத் திரும்பி வரும்போது என்னுடன் நீ சந்திப்பாய், முகத்தையும் பார்ப்பாய். ஆகையால் தீவிரமாகக் கலிமா ஓதென்று சொல்ல, உடனே அவன் கலிமா ஓதி ஈமான் கொண்டு இஸ்லாமாகி உடனே நவரத்தினம் முதலியவைகளைத் தட்டு

களில் நிறையக் காணிக்கை கொண்டு வந்து எதிரில் வைக்கவும், அப்போது ஸைத்தூன், ஓ தேரோஜாவே! நான் திரும்பிப் போகும் போது இவைகளை யெல்லா மெடுத்துக் கொள்ளுகிறேன். இப்பொழுது வேண்டாமென்று சொல்லி அவனுடைய சேனைகளை டங்கலையும் கலிமா ஓதச்செய்து நீங்களெல்லாம் இனிமேல் சந்தோஷமாயிருங்கள். தீனை மறக்கப் போகிறீர்களென்று சொல்லி நான் போகிறேனென்று சொன்னார்கள். அப்பொழுது தேரோஜா யெழுந்து நின்று கைகட்டி அதபாக ஓ பாதுஷாவே! என் மனதிலொரு கோரிக்கை யிருக்கின்றது, அதனைத் தங்களுடன் சொல்லுகிறேன் தாங்கள் இன்புற்றுக் கேட்டு உதவிசெய்ய வேணுமென்று விண்ணப்பஞ் செய்தான்.

## கஹுர்பாதை வெல்லுதல்.

அப்பொழுது சைத்தூன் தேரோஜவைப் பார்த்து உன்னுடைய மனதில் என்ன காட்டமிருக்கிறது சொல்லென்று கேட்க, அதற்கவன் என்னுடைய பகைவனொருவ னிருக்கிறான். அவன் பெரிய படைகளையுடையவன், அதிக வல்லமையுள்ளவன், 60. கெஜம் உயரமுள்ளவன். அவன் வருடந்தோறும் தப்பாமல் என் தேசத்திற்கு வந்து சண்டை செய்து என்னை வருத்தப்படுத்தி சேனைகளையும் அழித்துப்போட்டு பணங்காசுகளைக் கொள்ளையடித்துக் கொண்டு என்னைக் கொல்லாமல் உயிரோடே விட்டு விட்டுப்போகிறது அவனுடைய வழக்கம். அப்படியிருக்க நான் இஸ்லாமான சங்கதியை அவன் கேட்பானாகில் என்னை உயிரோடு விட மாட்டானென்று சொல்ல, அதைச் சைத்தூன் கேட்டு நீ ஒன்றுக்கும் அஞ்ச வேண்டாமென்று சொல்லி, உடனே மூவகைப் படைகளையும் கூட்டிக்கொண்டு காடுமலை வனங்களைத் தாண்டி அப்பட்டணத்தின் கிட்டேபோனார்கள். அப்பொழுது கோட்டையின் மேலிருக்கும் காவலாளிகள் இப்படைகள் வருவதைக் கண்டு பயந்து கிடுகலங்கி, இப்படிச் சமுத்திரம்போல் வருகிற தண்டுகள் யாருடையது, எவ்விடத்திலிருந்து வருகிறார்களென்று உற்றுப்பார்த்து கைகால் நடுக்கமோடு கோட்டையை விட்டுக் கீழே யிறங்கி ஓட்டமாக ஓடி, கஹுர் பாது ராஜனைக்கண்டு தூதர்கள் அடிபணிந்து, ஓ ராஜனே! இன்றொரு புதுமையை கண்டோம். அதென்னவெனில், கடல் புரண்டு வருவதுபோல் பெரிய படைகள் வருகிறது. அதுகளெவ்விடமிருந்து யார் வருகிறவர்களென்று பார்த்தோம். அப்படிப் பார்க்கையில் முதலாவது தேரோஜனுடைய படை இரண்டாவது மீஆதுடைய படை மூன்றாவது இஸ்லாமானவர்களுடைய படை. இவர்களெல்லாம் மொன்றாய்கூடி தங்கள்பேரில் சண்டைக்கு வருகிறார்களென்று தூதர்கள் சொன்னார்கள்.

## அலங்காரக் கண்ணி.

அந்தசொல்லைக் காதிலேகேட்டான் கஹறர்பாதுராஜன்
மூண்டதுகோப மென்மேலாக முரட்டு ராஜனுக்கு
பொங்குதுகோப மென்மேலாகப் போக்கிரிராஜனுக்கு
நெருப்பைப்போலே சிவந்தது கண்கள் கெடிய ராஜனுக்கு
முருக்கம்பூபோலே கண்கள் சிவந்தது மூடராஜனுக்கு
உதடுபடபட வென்றுதுடித்தது உயர்ந்த ராஜனுக்கு
மீசைபடபட வென்று துடிக்குது வீரிய ராஜனுக்கு
மந்திரிமார்களைப் பார்த்தானப்போ மண்டுங் கோபத்தால்
மந்திரிமார்களைப் பார்த்தானப்போ தணலாய் கோபமதாய்
என்னசொன்னார் தூதர்களென்று கேட்டான்ராஜாவும்
பேடியின்பேச்சைச் சொல்லவாவந்தாய் பெரியபுலிமுன்னே
கண்ணையுருட்டிப் பார்ப்பேனாகில் கத்திமின்னாது
நெறநெறவென்று பல்லைக்கடித்தான் நீண்டமுடிராஜன்
கோழிகள்வந்ததா நரியினைப்பிடிக்க கொக்கரித்துக்கொண்டு
ஆடுகள்வந்ததா புலியைமிரட்ட ஆங்காரங்கொண்டு
தவளைகள்வந்ததா பாம்பினைவெல்ல தைரியமிகவாகி
எலிகள்வந்ததா பூனையைதின்ன ஏக்கமிகக்கொண்டு
என்னைவெல்ல எவரால்முடியும் ஏழைகள் வந்தார்கள்
கொடியில்தூளாப் பறக்கச்செய்வேன் நூறு நூறாய்ப்போக
கத்தியையெடுக்க வல்லவருண்டோ காசினியோர்களிலே
அம்பையெடுக்க வல்லவருண்டோ ஆங்காரங்கொண்டு
தரையைவிட்டு தண்டாயுதத்தைச் சற்றேயெடுப்பாரோ
அப்படியிருக்க எப்படிவந்தார் ஆங்காரங்கொண்டு
ஆனாலாகட்டு மறியோம்சண்டை அடியுங்கள்நகாரு
சீக்கிரமாகப் படையைக்கூட்டி சண்டைக்குப்போக
என்றசொல்லைக் காதிலேகேட்டு அப்போபடைவீர்
கோடையிடிப்போல் கூடினாரெல்லாங் கூக்குரல்தான் போட்டு
கத்திகட்டாரிகள் பூட்டியேவந்தார் கணத்தபடைவீரர்
அம்புதண்டங்க ளெடுத்தப்போ வந்தார் ஆங்காரங்கொண்டு
பேரிகைமுழக்கத் தோடே யெழுந்தார் பெரியசண்டைசெய்ய
பம்பைகள் தாரைகள் முழங்கியேவந்தார் பாரசண்டைசெய்ய
கோட்டையைவிட்டு வெளியிலேவந்தார் கூட்டங்கூட்டமாக
அணியணியாகப் படைகளைவகுத்தார் ஆங்காரங் கொண்டு
அந்தவேளையில் மூவகைப்படையும் அணியணியாக நின்றார்
கடலுங்கடலும் சந்தித்தாப்போற் கண்டாரெல்லோரும்
அந்தவேளையில் விடையேவாங்கினார் தேராஜா ஆதி
பூமியதிர்ந்திட நடந்தாரப்போ பெரியசிங்கம்போல
மைதானிடத்தில் நின்றுகூப்பிட்டார் வலியவீரர்களை

சிப்பாய்மார்க ளாகவிருப்போர் சண்டைக்குவாங்கள்
சேவகமார்க ளாகவிருப்போர் சண்டைக்குவாங்கள்
மீசைமுளைத்த ஆண்பிள்ளையானால் முன்னேஓடிவாங்கள்
பேடிகளாக விருப்பீரானால் பின்னே யோடிப்போங்கள்
சண்டைக்குவந்த பேர்களாயிருந்தால் சல்தியாகவாங்கள்

வசனம்.

இவ்விதமாக மைதானில் வந்துதோராஜா சண்டைக்கு அழைப்பதைக் கஹர்பாது ராஜாவினுடைய படைவீரர்கள் கேட்டு, அதிலொரு வீரன் அதிக ஆங்காரத்தோடு எதிரில் வந்து கத்தியாலே வாங்கித் தோராஜனை வெட்டினான். அவ்வெட்டைத்தோராஜன்கேடகத்தால் தாங்கிக்கொண்டு அவனை வெட்டவும், அவன் கிறுகிறுவென்று சுழன்று குதிரையுமவனு மிரண்டு துண்டாகக் கீழே விழுந்து செத்தான். பின்னுமொருவன் வந்தெதிர்த்தான். அவனு மடிந்துபோனான். இப்படி வந்தவர்களையெல்லாம் தோராஜன் வெட்டிக் கொல்வதைக்கண்டு அதிக கோபத்தோடு சீறி கஹர்பாது ராஜன் வருவதைக்கண்டு பயந்து ஓடிவந்து சைத்தூனைக் கண்டு, இதோ வருகிறானே இவன்தான் கஹர்பாது, அதிக வல்லமையுள்ளவன், மிகுந்த கெட்டிக்காரனென்று சொல்ல, அச்சொல்லை, சைத்தூன் கேட்டு சீக்கிரமாகத் தன் குதிரையின் மேலேறி பெரிய சிங்கம்போல அவன் முன் வந்திட அவன் சைத்தூனைக் கண்டு ஆபாரத்தோடு முன்னில் வந்து நின்றான். அவனை சைத்தூன் பார்த்து ஓ கஹர்பாதே! நீ அதிக கெட்டிக்காரனென்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆகையால் உன்னுடைய வல்லமையை நானறியவேணும். இன்னும் என் படையும் உன் படையுமிருவருடைய வல்லமையைக் காணவேணும். ஆகையால் நீ குதிரையை விட்டுக் கீழேயிறங்கி வந்து என்னுடன் மல்லமர் செய்யென்று சொல்ல, உடனே ராஜன் குதிரையை விட்டுக் கீழேயிறங்கினான். சைத்தூனும் குதிரையை விட்டுக் கீழேயிறங்கி பாசக் கயிற்றையெடுத்து அவன் கழுத்திலே போடவும், அக்கயிர் அவன் கழுத்தில் மாட்டிக்கொண்டது. அப்போது சைத்தூன் வல்லமையோடு இழுக்க பெரியமலை சாய்வதுபோலே கீழே விழுந்து சைத்தூனைப் பார்த்து, ஓ அதிவீரசூர புலியே! உன்னைப்போல வல்லமையுடையவர்களை இதுவரையிலும் நான் கண்டதில்லை. உன்னெதிர்க்க ஒருவராலும் முடியாது. ஆண்டவனுனக்கு அதிக பலத்தைக் கொடுத்திருக்கிறான். என்னை பூமியில் தள்ளினாய். உன்னுடைய பெயரைச் சொல்லும் வடிவைகாண்பியு மென்று கேட்டான். அதற்கு சைத்தூன் நானிப்போது ஒரு காரியமாகப் போகிறேன். அவ்வேலையை முடித்துக்கொண்டு திரும்பி வரும்போது என் முகத்தை உனக்குக் காண்பிப்பேன். ஆனாலெனக்கு சமுத்திரத்

திற்குப் போகும் வழியையுங்காண்பி. அது இன்னமெவ்வளவு தூரமிருக்கிறதோ அதையுஞ் சொல்லென்று கேட்க, அதற்கவன் கடல் இன்னும் 2, 3-நாள் பயணமிருக்கிறது. அதுவும் கிட்டே யாயினதென்று சொல்ல, அதுகளை சைத்தூன்கேட்டு சீக்கிரமாகக் கலிமா ஓதென்று சொல்ல, உடனே கஹர்பாதுராஜன் கலிமா ஓதி ஈமான்கொண்டு இஸ்லாமாகினன். அவனுடைய படைகளெல் லாம் இஸ்லாமாகினர்கள். பின்பு கஹர்பாதுராஜாவும், தோராஜா வும் மீஆதுராஜாவும் இம்மூன்றுபேரு மொன்றாய்கூடியிருக்கும் போது, நான் போகக் கப்பல் தயார் செய்யுங்களென்று உத்திரவு கொடுத்தார்கள். அதுபோலவே கப்பலும் தயார் செய்தார்கள். பின்பு அவ்விடம் விட்டெழுந்து எல்லா படைகளுடனே கடற் கரை யோரம்போய் சேர்ந்தார்கள். அப்போது சைத்தூனைப் பார்த்து கஹர்பாது ராஜா சொன்னர், ஓ பாதுஷாவே தாங்கள் கப்பலேறிப்போனல் அந்தப்பட்டணம் போய்சேர 40-நாள் பிடிக் கும். அங்கு முதல் செத்து வாசற்படியில் 7-பேர் காவலாளிகள் மலை மேலிருக்கிறார்கள். அவர்கள் மிகுந்த வல்லமையுள்ளவர் களென்று சொல்லி, எல்லாரையுங் கப்பலேற்றிவிட்டு சைத்தூ னிடத்தில் 3 ராஜாக்களும் விடைபெற்றுக்கொண்டு அவரவர் பட்டணம் சுகமாகப்போய்ச் சேர்ந்தார்கள்.

பின்பு சைத்தூன் கப்பலோட்டும் மாலுமியைக் கூப்பிட்டுப் பாய் விரிக்கும்படி உத்திரவுகொடுக்க, உடனே மாலுமி பாய்விரித் துக் கப்பலையோட்டினன். அக்கப்பல் வேகமாக ஓடிவருகையில் அங்கோர் மலை எதிர்ப்பட்டது. அதைக்கண்டு மாலுமி அதனோர மாகக் கப்பலை கொண்டுவந்து நிறுத்தி லங்கர்போட்டு பார்க்கை யில், அம்மலைமேல் 7-பேர்காவலாளிகள்படுத்துநித்திரைசெய்து கொண்டிருக்கக்கண்டு சைத்தூன் அவ்விடம் கப்பலை நிறுத்தி அவர்களை யெனக்கு காண்பியென்று சொல்லவும், பின்பு கப்பலை அம்மலையோரத்தில் நிறுத்தி கீழேயிறங்கிப் பார்க்கையில், அந்த எழு காவலாளிகளும் கழுத்தில் பூநூலணிந்து நித்திரை செய்து கொண்டிருக்கக்கண்டு, சைத்தூன் உமறைப்பார்த்து, நீ விரை வாகப்போய் அவர்களை என்னுடன் சண்டைசெய்ய அழைத்து வாவென்று சொல்ல, உமர் உடனே யெழுந்து அவ்விடம்போய் அவர்களைப் பார்க்கையில், அவர்கள் உல்லாச நித்திரை செய்து அசந்து நினைவற்ற தூக்கமாகத் தூங்கிக்கொண்டிருக்கக் கண்டு, ஒரு கல்லையெடுத்து ஒருவன்பேரில் போட்டார். அவனதைச் சட்டைசெய்யவில்லை. பின்பு கத்தியையெடுத்து அவன் புறமாகக் குத்தினர். அதனலவன் ஒருகணித்துத் தன் கண்ணைத் திறந்து பார்க்கையில், ஒரு மனிதன் தலையின் புறமாக நிற்கக்கண்டு தழுவிப்பிடிக்க எழுந்தான். அப்போது உமர் குதித்தோடி வந்து

சைத்தூன் கிட்டே நின்று, நான் அவனை யெழுப்பினேன், அவ னென்னை பிடிக்கவந்தான், நானோடி வந்து விட்டேனென்று சொன்னார். அந்தச் சமயத்தில் முதல் காவற்காரன் சைத்தூ னெதிரில் வந்து நின்று மல்லமர் செய்ய வாவென்று கூப்பிட்டான். அப்போது சைத்தூன் அவனுடன் மல்லமர்செய்து ஒருவருக் கொருவர் தள்ளினார்கள். கடைசியில் சைத்தூனவனைக் கீழே தள்ளி மிதித்துக்கொண்டு நீ இப்போது கலிமா ஓதுவாயாகில் உன்னுயிர் பெற்று இன்னும் சில காலம் உலகத்திலிருப்பாய், இல் லாவிடிலுன்னுயிரையு மிழந்து நரகவாதியாய்ப் போவாயென்று சொல்ல, பயந்து உடனே கலிமா ஓதி ஈமான்கொண்டு இஸ்லா மாகினன். அதேபடி ஒவ்வொருவனாக உமர் அவர்களை எழுப்பி சைத்தூன் கெலித்துக் கெலித்து ஏழுபேரையும் இஸ்லாமாக்கி விட்டார்கள். பின்பவர்கள் கழுத்திலிருந்த பூனூல்களையு மறுத் தெரியும்படி செய்துவிட, அப்பொழுது அந்த ஏழுபேரும் சைத் தூனைப் பார்த்து தங்களுடைய பெயரையும் தங்கள் முகத்தையும் காண்பிக்கவேணும் எங்களைத்தள்ளி கெலித்தபடியினாலே நாங் களெல்லாம் தங்களுடைய குலாமாயிருக்கிறோ மென்று சொல்ல அதற்கு சைத்தூன் நான் ஷாயாபரியினிடத்திற்குப் போய்த் திரும்பி வரும்போது என் முகத்தைக் காண்பிப்பேனென்று சொல்ல, அதற்கு அவ்வேழுபேரும் எங்களுக்கு ஹரியாபரி இவ் வழியாய் ஏதாவது கப்பல்கள் வருமாகில் அதுகளைஇவ்விடத்திலே தானே முழுக்கடித்துப்போடுங்களென்று கட்டளையிட்டிருக்கிறாள். அதனால் நாங்கள் இவ்விடத்தில் காவலாயிருக்கிறோம். ஆகையால் அவ்வேலையை உங்களிடத்திற் செய்ய எங்களால் எவ்வளவுமா காது. இப்போ நீங்களெல்லாம் கப்பல் மேலேறிக்கொள்ளுங்கள், நாங்கள் உங்கள் கூடவருகிறோம் உங்களை யெல்லாம் அப்பட்ட ணத்திற்கொண்டு போய்விடுகிறோமென்று சொல்ல, உடனே மறு படியுங் கப்பலேறிப் போகும்போது அக்கரை யாயினது. பட்டண முந்தெரியலாயிற்று. அவ்விடத்தில் கப்பலை நிறுத்தி யெல்லா ரும் கீழே யிறங்கி கூடாரங்களடித்து அதற்குள்ளிருந்தார்கள். அவ்வேளையில் கூடவந்த காவலாளிகளெல்லாம் சைத்தூனிடத்தில் விடைபெற்றுக்கொண்டு ஷாயாபரி யிடத்திற்குப்போய் வந்த சங்கதிகளும் ஆகியோடக்[illegible] தூதர்கள் சொல்லக்கேட்டு, உடனே ஷாயாபரி தன்னுடைய மந்திரியை யழைத்து நீ போய் அவர்களை யிங்கழைத்து வாவென்று விடைகொடுக்க, உடனே மந் திரி சைத்தூனுடைய கூடாரத்தின் கிட்டேபோய் உள்ளே நுழைந் துப்போனான்.

அப்போது வாசற்படிக்குக் காவற்காரராகிய உமர், நீ யார்? உத்திர வில்லாமல் உள்ளேபோகத் துணிந்தாயென்று கேட்க,

அதற்கு மந்திரி நான் ஷாயாபரியினுடைய முதல் மந்திரி. இவரை யழைத்துவரும்படி உத்திரவாயினது. அதற்காக நான் வந்தே னென்று சொல்ல, அதற்கு உமர் நீ மறைவின்றிப் போகலாகா தென்று சொல்ல, அதற்கு மந்திரி பரிகளுக்கு மறைவு ஒன்று மில்லையென்று சொல்ல அதற்கு உமர் நீ வெளியேநில்லு, நான் போய் உத்திரவுபெற்று வருகிறேனென்று சொல்லி நிறுத்திவிட்டு இச்செய்தியை சைத்தானுக்குப் போய்ச் சொல்லினர். அச்செய் தியை சைத்தூன் கேட்டு, சீக்கிரமாக முழுகி பெண்ணுடைகளை யெல்லா மெடுத்தணிந்து நகைகளு மணிந்துகொண்டு தலைமேல் துப்பட்டியிடாமல், வந்த மந்திரியின் கூடச் சேர்ந்து இருவருமாய் அரசன் சிம்மாசனத்திற்கு இன்பமாகப் போய் ஷாயாபரியைக் கண்டு சைத்தூன் சலாஞ் செய்யவும், அப்போது ஷாயாபரி பார்த்து உன் பெயரென்ன வென்று கேட்க, அதற்கு என் பெயர் ஸைத்தூன், நான் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமுடைய மருமகன், என்னை அலி றலியல்லாஹு தங்களிடத்திற் கனுப்பி வைத்தா ரென்று சொல்ல, ஷாயாபரி கேட்டு சர்வரே ஆலத்தின் பேரில் தறாதோதி, ஒ சைத்தூனே! உன் தலைமேல் ஏன் துப் பட்டியிடவில்லை, திறந்த தலையாக வந்தாயென்று கேட்க அதற்கு சைத்தூன் என் தலையை மூடும் துப்பட்டி உன் மகள் வீட்டிலிருக் கிறதென்று சொன்னார்கள். அதை ஷாயாபரி கேட்டு அதிக கோபங்கொண்டு உடனே தன் மகளை யழைத்து நீ என்ன காரணத் திற்காக மனிதனை எடுத்து வந்தாய்? ஆகையால் அவரைச் சீக்கிரமாக இங்கு கொண்டுவா வென்று கண்டிப்பான உத்திரவு கொடுத்தான். இங்கே ஹரியாபரி முஹம்மது ஹனிபை யெடுத்துக் கொண்டு போய் என்ன செய்தாளெனில், கொண்டுபோன நாள் முதலாக நாள்தோறுந் தவறாமல் நீ யென்னுடன் சேர்வாயாகில் ஒடிந்துபோன காலுக்கு மருந்திட்டு சொஸ்தப்படுத்துவே னென்று கலைத்துக் கொண்டே யிருப்பாள். அதற்கு முஹம்மது ஹனிபு இவ்வேலை யென்னா லாகாதென்று ஒப்பாமலே தடுத்துக் கொண்டே யிருந்தார். அதற்காக வேண்டி முஹம்மதனிபுக்கும் நாளுக்கு நாள் வருத்தமாகிக் கொண்டே யிருந்தது.

## முஹம்மதனிபை மீட்டி வருகுதல்.

இன்னுமதனால் உடலெல்லா முருகி நிரம்பவும் கரைந்து போனார்கள். பின்பு ஹரியாபரி தகப்பன் சொல்லியபடி கட்டிலின் மேல் முஹம்மது ஹனிபை வைத்துத் தகப்பனுக்கு முன்னாகக் கொண்டு வந்து வைத்தாள். உடனே பாதுஷா முஹம்மது ஹனிபை ஸைத்தூ னிடத்தில் ஒப்புவித்து விட்டு நீஉன் புருஷனைச் சுகமாக அழைத்துக் கொண்டு போவென்று சொல்ல, ஸைத்தூன் முஹம்ம தனிபு இருக்கிற ஹாலைப் பார்த்து மனங்கலங்கிப் பெருமூச்சு விட்டு

அறைந்து மோதி அக்கட்டிலின் மேல்போய் விழுந்து புரண்டழுது ஷாயாபரியைப் பார்த்து உலகத்தில் இதற்கு மருந்தில்லையா வென்று கேட்க, அதற்கு ஷாயாபரி இதற்கு இங்கே மருந்திருக்கிறதென்று சொல்ல, அதைக் கேட்டு ஸைத்தூன் இப்புண்ணை யாற்றுவது உன் பேரில் கடனா யிருக்குமென்று சொல்லிப் பின்னும் சர்வரே ஆலத்தினுடைய கிருபையும், அலியாருடைய கிருபையு முண்டாகு மென்று சொல்ல, அப்போது பரிகளுடைய அரசனாகிய ஷாயாபரி பரிகளைப் பார்த்து இன்ன காட்டில் இன்ன புல்லிருக்கின்றது, அதைக் கொண்டு வந்து சீக்கிரமாக மருந்துசெய்து புண்ணின் மேல் கட்டுவீர்களாகில் ஹக்தஆலாவினுடைய கிருபையினாலுடனே அவர் ரூஹத்துப் பெருவார். அம்மருந்தை மூன்று நாள் வரைக்கும் ஒரு கட்டாகக் கட்டி அதை அவிழ்த்தெரிந்து விட்டு பின்னும் மூன்று நாள் வரைக்கும் வேறு மருந்தைக் கட்டி அதையு மவிழ்த் தெரிந்து விட்டுப் பின்பு மூன்று நாள் வரைக்கும் அதே மருந்து வைத்துக் கட்டினால் சதை தோல் முதலியதும் கூடிப்போகு மென்று சொல்ல, உடனே ஷாயாபரி சொன்னப்படியே அம்மருந்தைக் கொண்டு வந்து கொடுத்து விட்டு மூன்று முறை ஒன்பது நாளிற்குள்ளாக ஒடிந்த எலும்புக ளெல்லாம் ஒன்றாய்க் கூடி சதையும் வளர்ந்து தோலும் மூடிக் கொண்டு புண்ணுலர்ந்து நன்றாய் விட்டது பின்பு ஸைத்தூன் 40 நாள் வரைக்கும் அவ்விடமேயிருந்து முஹம்மது ஹனிபுக்கு வல்லமையும் முன்வடிவும் வரும்படியாக நல்ல நல்ல சோறு கறிகளாக்கி உண்ணக் கொடுத்து பலமும் அழகும் வரும்படி செய்து பின்பு ஷாயாபரி யிடத்தில் தங்கள் பட்டணம் போக விடை பெற்றுக் கொண்டு முஹம்மதனிபு தன்னாயுதங்க ளெல்லாம் பூட்டிக் கொண்டு ஸைத்தூனை மஹ்றவினுள் வைத்து விட்டார். பின்பு சகல படைகளையும் கப்பலேறச் சொல்லித் தானுங் கப்பலேறி மாலுமியைக் கூப்பிட்டு பாய் விரிக்கும்படி உத்திரவு செய்ய, உடனே மாலுமி பாய்விரித்து கப்பலை ஓட்டினான். அக்கப்பல் முதல் காவலாளிகளுள்ள மலையின் கிட்டே வந்தது, அப்போது அக்காவலாளிகள் 7-பேரும் ஓடோடியும் வந்து எதிர் கொண்டார்கள். அப்பொழுது முஹம்மது ஹனிபு அவர்கள் திரேகத்தைக் கண்டு இதென்ன முசீபத்தாகிய புதுமையா யிருக்கிறதென்று சொல்ல அதற்கு உமர் இமாமே! இவ்வேழு பேரையும் ஸைத்தூன் கீழே தள்ளி இவர்கள் ஈமான் கொள்ளும் படி இஸ்மாக்கி யிருக்கிறார்கள். ஆனதாலிவர்கள் தங்களைக்காண வந்தார்க ளென்று சொல்ல, அது கேட்டு முஹம்மது ஹனிபு அதிசயப்பட்டார். பின்பு ஹக்த ஆலாவைப் புகழ்ந்து என் நாயனே! நீ ஸைத்தூனுக்கு அதிக வல்லமையைக் கொடுத்தா யென்றார். இன்னும் எத்தனையோ அரசர்களை அடிமையாக்கி யிருக்கிறார்கள், ஆனால் இந்த ஆட்டங்க ளெல்லாம் அல்லாஹு

தஆலாவினுடைய குதரத்தா யிருக்கும். அப்பொழுது அந்த ஏழு பேரும் முன்னம் வந்து முஹம்மதனிபாவிற்கு சலாஞ் சொல்லி அதிக மரியாதையுடனே நின்று ஓ பாதுஷாவே! எங்களுடன் சில பேச்சுகள் பேசவேணும், தங்களுடைய முகத்தையுங் காண்பிக்க வேணுமென்று கேட்க, அதற்கு முஹம்மது ஹனிபு உமரைப் பார்த்து இவர்களென்ன கேட்கிறார்களென்று சொல்ல, அதற்கு ஓ இமாமே! திரும்பி வரும்போது முகத்தைக் காண்பிக்கிறே னென்று ஸைத்தூனவர் சொல்லி யிருக்கிறார்கள். ஆகையால் சந்திக்க வந்திருக்கிறார்கள. தங்கள் முகத்தைக் காட்டுமென்று சொல்ல, அப்பொழுது முஹம்மதனிபு தன் முகத்தின் மேல் இருந்த திரையை நீக்கி முகத்தை யவர்கள்பார்க்கும் படி காண்பித்தார். அந்த ஏழு பேரும் முகத்தைப் பார்த்து அதிக சந்தோஷங் கொண்டார்கள். பின்பு வேண்டிய முத்துமணி முதலிய நவரத்தினங்களைக் கப்பலில் கொண்டு வந்து நிரப்பினர்கள். அப்பொழுது உமர் அவர்களைப் பார்த்து நீங்கள் கொடுப்பதை யெல்லாம் என்னிடத்தில் கொடுங்கள். நான் பத்திரப் படுத்தி வைக்கிறே னென்று சொல்ல, அவர்கள் அதேபடி கொடுத் தார்கள். அதுகளை யெல்லாம் உமர் வாங்கி பட்டுவாக்குள்விட்டு முஹம்மதனிபாவின் முன்னங் கொண்டு வந்து வைத்தார். பின்பு அவர்களிடத்தில் விடை பெற்றுக் கொண்டு அவ்விடம் விட்டுப் பாய் விரித்துக் கப்பலை யோட்ட நாடினர்கள். அந்த சமயத்தில் உமர் அவ்வேழு பேரையும் பார்த்து உங்களுக்கு ஒரு ரகசியமான செய்தி சொல்லுகிறேன் கேளுங்கள் என்று சொன்னர். அதென்ன வெனில், உங்களைக் கீழே தள்ளி கெலித்தது இவருடைய பெண் ஜாதி ஸைத்தூன் என்று சொல்ல, அது கேட்டு அவர்களேழு பேரும் நாணங் கொண்டு ஆஹா நம்மை ஜெயித்தது பெண் பிள்ளையா யிருக்க இச்செய்திகளை நம்முடைய இனத்தார்கள் கேட் பாராகில் இகழ்ச்சி செய்வார்களென்று நிரம்பவும் வெட்கித் தலை கவிழ்ந்து உமரைப்பார்த்து நீ இந்த சங்கதிகளை யாருக்குஞ் சொல்லி எங்கள் வெட்கத்தை வெளியாக்காதே யென்று வேண்டிய பணங்களைக் கொடுத்தார்கள். உமர் அவைகளைக் கொண்டு கப்பலை யோட்டினர்கள்.

இப்படிச் சில நாள் வரைக்கும் கடல் மேல் கப்பலோடி வந் தது. கடைசியில் கஹர்பாது ராஜாவினுடைய எல்லைக்குச் சரியாகக் கப்பல் வரவும், அங்கே லங்கர் போட்டு கப்பலை நிறுத்தி அதி லிருந்த பேர்களெல்லாங் கப்பலை விட்டுக் கீழே யிறங்கிக் கரை வந்து சேர்ந்து இரண்டு நாள் வரைக்கும் நடந்து அந்த இராஜா வினுடைய கோட்டைக்குச் சமீபத்தில் கூடாரங்க ளடித்து சகல படைகளுடன் முஹம்மது ஹனிபு இறங்கினர். அப்போது

தூதர்களோடி கஹர்பாது ராஜாவிற்கு முஹம்மதனிபு இன்று வந்து இறங்கினர் யென்று சொன்னர். அச்செய்தியை அரசன் கேட்டு மிகுந்த சந்தோஷத்தோடு சந்திக்க வந்தார். அங்கு முஹம்மது ஹனிபாவைப் பார்த்து, தாங்கள் என்னுடன் சில வசனங்கள் பேசி தங்கள் முகத்தை நான் பார்க்கும் படி காட்டவேணு மென்று இன்புற்றுக் கேட்க, அதற்கு முஹம்மது ஹனிபு உமரைப் பார்த்து இவரென்ன சொல்லுகிருர் என்று கேட்டார். அதற்கு உமர் இவ்வரசனை ஸைத்தூன் கீழே தள்ளி இவனைக் கெலித்த படியால் அப்பொழுது இவர் ஸைத்தூனைப் பார்த்து தங்கள் முகத்தைப் பார்க்கவேணும் காட்டு மென்று கேட்க நான் திரும்பி வரும்போது காண்பிக்கிறே னென்று சொன்னர்கள். ஆனதால் இப்பொழுது தங்கள் முகத்தை காட்டச் சொல்லுகிரு ரென்று சொல்ல, அப்பொழுது முஹம்மதனிபு தன் முகத்தை அவ்வரசனுக்கு காண்பித்தார்.

அவ்வரசன் முகத்தைப்பார்த்து அதிக சந்தோஷங்கொண்டு தட்டுகளில்பொன் வெள்ளி முத்து மணி முதலிய வைகளைக் காணிக் கையாய்க் கொண்டுவந்து எதிரில் வைத்தார் அவைகளை யெடுத் துக் கொண்டார்கள். பின்பு இராஜன் அவர்கள் போகும்படி உத் திரவு கொடுத்து விட்டார். அப்போது உமர் கஹர்பாதுக்கூட போய் அவனுடைய காதில் மெதுவாக ஒ ராஜனே! உன்னேடு சண்டை செய்து உன்னை கெலித்தது இவருடைய மனைவி ஸைத் தூனென்று சொல்ல, அதை கஹர்பாது கேட்டு அதிக வெட்கங் கொண்டு இச்சொல்லை யாருக்கும் சொல்லாதேயென, அதற்கு உமர் ஏதாவது கொடுத்தால் யாருடனுஞ் சொல்லேனென்று சொல்ல, அப்போது அவருடைய பட்டுவா நிறைய பணத்தை வாரிகொடுத்தான். அதை அவர் வாங்கிக்கொண்டு தன்னிருப் பிடத்திற்கு வந்து விட்டார். பின்பு முஹம்மது ஹனிபு தன் சேனை களோடு பட்டணத்தை விட்டு தேராஜாவினுடைய பட்டணம் வந்து சேர்ந்து வெளியே தன் படைகளோடு இறங்கினர்.

இவர்கள் வந்ததை தூதர்கள் கண்டு ஓடோடியும்போய் தேரா ஜாவுக்குச் சொல்ல, இராஜன் கேட்டு மிகுந்த மகிழ்வோடெழுந்து முஹம்மதனிபிடத்திற்கு வந்து ஸலாஞ்செய்து மிகுந்த அதபுடனே எதிரில் நின்று, போய்த் திரும்பிவரும்போது இங்கு வந்து அப் போது என் முகத்தைக் காட்டுகிறெனென்று ஸைத்தூன் சொல்லி வந்தபடியால் இப்போது அவர்கள் தானென்று தங்கள் முகத்தைக் காண்பித்திடுமென்று சொல்ல, அப்போது முஹம்மது ஹனீபு தன் முகத்தின் வடிவை காட்டினர். அதுகண்டு தேராஜன் அதிக சந்தோஷங்கொண்டு தட்டுகள் நிறைய நிதிகளை நிரப்பிக்காணிக்

கையாக வைக்க அவைகளை முஹம்மதனிபு எடுத்துக்கொண்டு அதிக சந்தோஷமடைந்தார். பின்பு உமர் தேராஜாவின் கிட்டே போய் காதோடு வாயை வைத்து உன்னோடு சண்டைசெய்து உன்னைக் கிழே தள்ளி கெலித்துக்கொண்டது இவருடைய பெண் ஜாதி ஸைதூனு யிருக்குமென்று சொல்ல அச்சொல்லைத் தேரா ஜன்கேட்டு, நீ இப்பேச்சை வெளியில் யாருடனும் சொல்ல வேண் டாமென்று சொல்ல, அதற்கு உமர் ஆனால் நீ இனும் கொடுப்பா யாகில் நான் யாருடனும் சொல்லாமல் மறைத்து வைப்பேன். இல்லாவிடில் எல்லோருக்கும் சொல்லி விடுவேன் அதனால் உன் வெட்கம் வெளியாய்ப் போகுமென்று சொல்ல, அது கேட்டு தேராஜன் 40,000 தங்கக்காசு இனுமாகக் கொடுத்தான். அதை வாங்கிக் கொண்டு உமர் சந்தோஷமானார்.

பின்பு அவ்விடம் விட்டு விடுதிவிடுதிகளாக இறங்கி நடந்து போய் மீஆது ராஜாவினுடைய எல்லை அடுத்து கோட்டைக்கு அடுத்தாப்போல் கூடாரங்களடித்து சகல பேருமாக இறங்கினர் கள். தூதர்கள் ஓடிப்போய்ச்சொல்ல, மீஆது ராஜன்கேட்டு அதிக மகிழ்வாடு இங்கு வந்து ஸலாஞ்சொல்லித் தாங்கள் திரும்பிவரும் போது முகத்தைக் காண்பிக்கிறதாகச் சொன்னீரே, இப்போது நான் பார்க்கும்படி முகத்தைக்காட்டவேணுமென்று சொல்லிக் கேட்க, அப்போது முஹம்மது ஹனிபு தன் வதனத்லைதக் காண் பிக்கக்கண்டு அதிக சந்தோஷமாயினர். பின்பு தட்டுகள் நிறப்பி யளவற்ற பணங்களைக் காணிக்கையாக எதிரில் வைக்கவும், அவை களை முஹம்மதனிபு எடுத்துக்கொண்டு அதிக மகிழ்வடைந்தார். பின் பவரிடத்தில் போகவிடைபெற்றுக் கொண்டார். அப்போது உமர் மீஆதுடனே பின் தொடர்ந்துபோய் அவன் காதில் தன் வாயை வைத்து உன்னோடெதிர்த்து சண்டைசெய்து கிழே தள்ளி உன்னைக்கெலித்தது இவருடையபெண்ஜாதி ஸைத்தூனுயிருக்கும் யென்று சொல்ல, அதுகேட்டு மீஆது அதிக விசனங்கொண்டு முகம்வாடி, ஓ உமரே! நீ இப்பேச்சை யாருடனும் வெளிப்படுத் தாதே யென்று சொல்ல, அதற்கு உமர் நீ என் மனதை சந்தோ ஷிக்கும்படி செய்வாயாகில் நான் யாருடனும் சொல்லேனென்று சொன்னர்; உடனே வேண்டுமான இனும்கள் கொடுத்தார். அதை உமர் வாங்கிக்கொண்டு தன்னிருப்பிடமாகப் போய்சேர்ந்து அன்று அவ்விடம் விட்டு நடந்தார்கள். இப்படி சில நாள் வரைக்கும் விடுதி விடுதியாக கழிந்து போகையில் இங்கு இரண்டுவழி பிரி வாயினது. ஒன்று மதீனத்திற்குப் போகிறபாதை மற்றொன்று இரமெனும் பட்டணத்திற்குப் பேரகிற பாதை. அவ்விடத்திற் போயிறங்கி தாங்கள் வந்த நாளைக் கணக்கிட்டுப் பார்க்கையில் சரியாக 7 வருஷம் நிரப்பமாய் விட்டது. அப்பொழுது அஸ்

ஹாபுகளெல்லாம் முஹம்மதனிபைப் பார்த்து நாம் வந்து வெகு நாளாய் விட்டது. இனி மதீனத்திற்குப் போவோம் வாருமென்று சொன்னார்கள். அதற்கு முஹம்மதனிபு நான் இறமுக்குப் போகாமல் மதீனம் போகிறதில்லை யென்று சத்தியஞ்செய்து கொண்டிருக்கிறேனென்று சொன்னார். அதை அஸ்ஹாபு மார்கள் கேட்டு தாங்கள் மதீனம்போக நாடியிருந்த நினைப்புகளைமாற்றி இறமென்னும் பட்டணம் எப்படி இருக்கின்றதோ அதையும் போய்ப் பார்த்து வருவோமென்று எல்லாம் ஒருமித்து ஒரே மனதாயிருந்தார்கள். அப்பொழுது எல்லாருங்கூடி ஆளுக்கொரு கடிதமெழுதி உமர்கையில் கொடுத்து மதீனத்திற்கு அனுப்பி வைத்தார்கள். முஹம்மது ஹனிபு தன் தகப்பனுக்கு மொருகடிதம்மெழுதி யனுப்பினார். உமர் இக்கடிதங்களெல்லாம் வாங்கிக்கொண்டு கடுக நடையாக நடந்து சில நாளிற்குள்ளாக மதீனம் வந்து சேர்ந்து அவரவர் கடிதங்களை அவரவர்கள் வீட்டில் கொடுத்தார். அவர் அவர்கள் கடிதத்தை அவிழ்த்து வாசித்துஅதிலுள்ள பயன்களை அறிந்து சந்தோஷப்பட்டார்கள். பின்பு உமர் எல்லோருக்கும் வாய் விசளமாக அங்கே நடந்த சங்கதிகளெல்லாம் ஒன்றுந் தவறாமல் ஆதியோடந்தமாகச் சொல்லினார்.

## முஹம்மது ஹனிபு 'இறமுக்குப் போகுதல்.

உமரை மதீனத்திற்கு அனுப்பிவைத்துவிட்டு பின்பு முஹம்மதனிபு தன்னுடைய 12,000 அஸ்ஹாபுமார்களையு மழைத்துக் கொண்டு விடுதிவிடுதியாகச்சென்று இறமின் கோட்டைக்கு அடுத்தாப்போல் கூடாரங்களடித்து இருந்தார்கள். அவர்களைக் காவலாளிகள் கண்டு ஓடோடியும்போய் பாதுஷாவின் முன்பாக நின்று மிகுந்த சங்கையுடனே முன்னால் காலொடிந்துபோனவன் தன் கால்களைச் சுத்திசெய்துகொண்டு 12,000 குதிரைப்படையுடனே நம்முடைய கோட்டையினருகில் கூடாரங்களடித்து இறங்கிஇருக்கிறார்களென்று சொல்ல, அதை பாதுஷா கேட்டு நல்லது நல்லது காலையில் யாதொரு வேலையும் பார்ப்போமென்று தூதர்களுக்குச் சொல்லிப் பின்பு மந்திரிமார்களைப்பார்த்து பொழுது விடிவதற்குள்ளாக நம்முடைய படைகளையெல்லாம் தயார் செய்யுங்களென்று கட்டளையிட்டான். அதேபடி மந்திரிமார்கள் பொழுதுவிடிவதற்கு முன்னதாக தன் படைகளையெல்லாம் சேர்த்து தயார் செய்துவிட்டார். பின்பு பொழுது விடிந்தவுடனே சண்டை வாத்தியங்கள் முழங்கும்படி கோட்டையைவிட்டு வெளியில் வந்து மைதானில் அணியணியாக நின்றார்கள் அப்போது முஹம்மது ஹனிபு தன் படைகலனையெல்லாம் மொன்றாகச்சேர்த்து தானும் மைதானில் வந்து அணியணியாக படைகளை வகுத்து நின்றார்.

## அலங்காரக்கண்ணி.

இரண்டுபடைகளும் சமுத்திரம்போல எதிர்த்து நிற்கையிலே
இறமின்படையி லிருந்தொருவீரன் எழுந்தான் புலிபோலும்
ஆங்காரங்கொண்டு படைமுன்வந்தான் ஆண்மைமிகப்பேசி
அந்தவேளையில் முஹம்மது ஹனிபு அஸ்ஹாபுமாரிலொருவர்
பந்தயங்கூறிப் பாவிமுன்னாகத் தன்பரியைத் தான்விட்டார்
பூமியதிர்த்திட விட்டார்குதிரையை பெரியசிங்கம்போல
வந்ததைக்கண்டு எதிர்த்தான்பாவி வலியபுலிபோல
ஒருவருக்கொருவர் வல்லமைசெய்து ஓங்கிவாளாலே
விட்டாரிரண்டு துண்டாய்விழுந்தான் வீரசூரபுலி
அதன்பின்னொருவன் வந்தெதித்தா னாங்காரம்பேசி
அவனையும்வெட்டி நரகுக்கிரையா யனுப்பினாரப்போ
பின்னுமொருத்தன் வந்தானங்கே புலிபோல்தான்சீறி
துண்டாய்விழுந்திட வெட்டினாரவனை சூரர்கைவாளால்
இப்படியாக வந்தோரெல்லா மிறந்தார் கைவாளால்
ஒரு வருந்தப்பிப் போகவேயில்லை உயிரையிழுசகாமல்
இப்படி அஸ்ஹாபுமாரால் மாண்டதைக்கண்டு இறமின் ராஜன்
கடித்தான் பல்லை கெறகெறவென்று கண்கள் நெருப்பாகி
கண்கள் இரண்டும் சிவந்துபோச்சுது இறமின் ராஜர்க்கு
மீசைகள் படபடவென்று துடித்தது இறமின் ராஜர்க்கு
கையைமுறித்தான் கோபங்கொண்டு கனத்தமுடிராஜன்
இப்படிநம்முட படைகளைக்கொன்றார் இரக்கங்களில்லாமல்
ஆனாலகட்டு மெப்படித்தப்புவார் அறபிதேசத்தார்கள்
என்று சொல்லிப் பல்லைக்கடித்தான் இறமின்ராஜாவும்
மந்திரிமார்களே இந்தவேளையில் மனது துணியவேணும்
பிந்திப்போவோ மானாலிப்போ பேடியாகவேணும்
நம்முடையபடைகளை ஒன்றாய்க்கூட்டும்நல்லதருணவேளை
ஒரேமுகமாய்த் தாக்கிடவேணும் ஓடியவர்கள்போக
அந்தச்சொல்லைக் காதிலேகேட்டு அப்போபடைவீரர்
விழுந்தாரெல்லா மொன்றாய்கூடி வெள்ளகடல்போல
அந்தவேளையிலென்னசெய்தார் அறபுப்படையோர்கள்
நாலுமூலையும் புலிபோல் புகுந்தார் நடந்த பெரியசண்டை
ஒருபுறம் உமரலி புகுந்தார் உருவி கையில்கத்தியேந்தி
ஒருபுறம் ஷைத்தூன் புகுந்தான்புலிபோல உருவிகையில்கத்தி
இருபுறம் அஸ்ஹாபுமார்கள் புகுந்தார் உருவிகையில்கத்தி
இப்படி நாலுபுறமும் வெட்டினார் ஒன்றுந்தெரியாமல்
துண்டுதுண்டா விழுகுதுபிணங்கள் சூரர்கைவாளால்
குப்பல்குப்பலாகவே யெங்கும் குவித்தார் மலைபோல
ஆறாயோடிப் போச்சுது ரத்தம் அவனிதெரியாமல்

கட்டுமரங்கள் போலபிணங்கள் மிதக்குது கண்டதூரம்
தயிரின் குடம்போல் மூளைகள்சிதறி தரைஎல்லாஞ்சிந்த
வெட்டிவெட்டி குவித்தார் காபரை வம்படைத் தலைவீரர்
கையொரு பக்கம் காலொரு பக்கம் காணகுவிந்து போச்சு
தலையொரு பக்கம் உடலொரு பக்கம் தரையில் குவிந்துபோச்சு
குதிரைகள் துண்டு துண்டாய்க் குவிந்து கொற்றவர் கைவாளால்
காகம்பருந்துக்கு விருந்துகளளித்தார் கழுகு கொத்தித்தின்ன
தண்டு முறிந்தது கத்தி முறிந்தது சக்கர முறிந்துபோச்சு
சண்டைக்குவந்த வீரர்கள்பேசிய தைரியம் ஓடிபோச்சு
இனியென்ன செய்வோமென்றுநின்று எண்ணமிடுவாரும்
பெண்டுபிள்ளைகள் தனைநினைத்துப் புலம்பி அழுவாரும்
எங்கேயோடிப் பிழைப்போமென்று யோசனை செய்வாரும்
படைகளெல்லாம் மாண்டுபோச்சுதே போவோமென்பாரும்
வாய்நீர்காய்ந்து ஓடினாரெல்லாம் வெட்டமுடியாமல்
எதிர்த்திடஅஞ்சி யோடினாரெல்லாம் ஏக்கமிகவாகி

வசனம்.

இவ்விதமாக இரண்டு படைகளும் ஒன்றோடொன்று எதிர்த்துப் போர்கள் செய்யும் சமயத்தில் சூரியன் மேற்புறமாகப்போய் மறையவும், இருள்வந்து மூடிக்கொண்டது. அப்போது இரண்டு படைகளும் சண்டை நிறுத்தி அவரவரிருப்பிடம்போய்ச் சேர்ந்தார்கள். அன்று மூஹம்மது ஹனிபாவினுடைய சேனையில் ஒருவரும் மவுத்தாகவில்லை. ஆனால் ஒருவருக்கு மாத்திரம் காயம்பட்டது. இறமின் சேனையில் அனேகம் பேர்கள் மடிந்து நாசமடைந்தார்கள் அன்றிரவு ஷாஹே இறம் தன்னுடைய மந்திரிமார்களை யழைத்து நம்முடைய வெட்கம் மீறுமான யோசனைகள் செய்யுங்கள். இல்லாவிடில் அவர்கள் ஆங்காரித்துப் போவார்களென, அதற்கு மந்திரிமார்கள் அரசருக்குத்தைரியம் வரும்படி அனேக வார்த்தைகளைச் செல்லி அவர்களை நாம் ஒரு தந்திரத்தினால் கொல்ல வேணுமென்று சொல்ல, அதற்கு பாதுஷா எவ்விதமாக வெல்லுவதென்று கேட்டான். அதற்கு மந்திரிமார்கள், ஓ பாதுஷாவே! அவர்கள் எச்சரிக்கை யின்றி இராக்காலங்களில் ஏமாந்து தூங்குவார்கள் அந்நேரவேளையில நாம் நம்முடைய படைகளை யெல்லாஞ் சேர்ந்து போய் வீழ்ந்து வெட்டுவோமாகில் அவர்களெல்லாம் மடிந்து போவார்கள். நாம் செலித்து கொள்ளலாமென்று சொல்ல, அரசன்கேட்டு சம்மதித்து, அதேபடி உடனே தங்கள் சேனைகளெல்லாம் ஒன்றாகக்கூட்டி வெளியே புறப்பட்டார்கள். அன்றிரவு முஹம்மது ஹனிபும் அவருடைய படைகளும் அயர்ந்து இச்சூதுகளொன்றுந் தெரியாமல் ஏமாந்து எல்லாம் நித்திரை செய்து கொண்டிருந்தார்கள். அந்நேரவேளையில் [illegible] காபிரியாய்போய்

விழுந்தார்கள். அப்போது முஹம்மது ஹனிபுடைய படைக ளெல்லாம் காபருப்பட்டு தயிர்க்குடம்போல சிதறி சிலர் கிழக்கு முகமாக நாலுதிக்குஞ் சிதறிப்போனார்கள். முஹம்மதனிபும் கோட்டை அகழில்போய் விழ்ந்துவிட்டு அதனுள்ளிருந் தொரு சத்தமிட்டார். அப்போதொரு மலக்கு யாஅலியே! உன்னுடைய பிள்ளை முஹம்மதனிபு கோட்டையின் அகழில் இன்றிரவு விழ்ந்து விட்டார். இது பொய்யல்ல, உண்மையா யிருக்கும், நீ சீக்கிரமாக இப்போதே வெளிப்பட்டு கூட உமரை யழைத்துக் கொண்டு இறமுக்குப்போகுமென்று சொன்னார். அச்சொல்லைக்கேட்டவுடனே அலிறலியல்லாஹு குதிரைக்கு ஜீனிகட்டி ஜுல் பக்கார் கத்தியைக் கையிற் பிடித்துக் கொண்டு குதிரையின் மேலேறி மின்னல் மின்னினாப்போல இறமுக்கு வந்து சேர்ந்து ஒரு சத்த மிட்டார். அந்தச் சத்தத்தினாலே அந்த பாதுஷா சிம்மாதனத்தின் மேலிருந்து துள்ளிப்பாய்ந்து கிழே வீழ்ந்து விட்டான். இன்னும் அந்தச் சத்தத்தை அசுஹாபிமார்களெல்லாங் கேட்டு இது அலியாருடைய சத்தமென்று சந்தோஷமானார்கள். முஹம் மது ஹனிபை அகழைவிட்டு வெளியே யெடுத்து குதிரையின் மேல் ஏற்றினார். முஹம்மது ஹனிபும் ஸைத்தூனும் தாலிபலியும் உமர் அலியும் அலிறலியல்லாஹுவைக்கண்டு சந்தித்தாகள்.

அதற்குள்ளே பொழுது விடிந்து விட்டது. அப்பொழுது அலிறலியல்லாஹு துல்துலின் மேலேறி ஜுல்பக்காரைக் கையில் வாங்கி அக்காபருடைய படைக்குட் புகுந்து கண்டங் கண்டமாக வும் தலைகளும், உடல்களும் மலைபோல இரத்தத்தில் பிணங்கள் மிதக்கவும், ஆறுபோல இரத்தம் ஓடவும் வெட்டி நாசமாக்கினார் கள். அதனால் அந்த பாதுஷா பயந்து 200-குதிரைக்காராருடனே கோட்டையை விட்டுவிட்டு வெளியே ஓடிப்போய் விட்டான். அப் பொழுது அலிறலியல்லஹு வெட்டுக்கு மிஞ்சின காபர்களை யெல்லாம் இஸ்லாமாக்கி விட்டார்.

பின்பு அஸ்ஹாபுமார்களுடன் வெற்றிப்பெற்று கோட்டை யினுள்ளேபோய் அவனைத் தேடிப்பார்க்க அவன் அகப்படவில்லை. உடனே அலிறலியல்லாஹு உமரைக் கூப்பிட்டு இவனெங்கேயோ ஓடிப்போய் விட்டான். ஆகையால் நீ அவனைக் கண்டு பிடித்து வாவென்று உத்திரவுகொடுத்தார். உடனே உமர்வெளிப்பட்டுக் காற் றைப்போல வேகமாகவே நடந்துவழியில் பாதுஷாவைக் கண்டு பிடித்தார். அந்த இறமின் பாதுஷா தன்னுடன் பிறந்த தம்பிமார் 4-போர்கள் நாலு தேசத்தை ஆண்டு கொண்டிருக்கிறார்கள். அங்கேபோய் உதவிதேடிக் கொள்வோமென்று போனான். அவன் பின்னாலேயே அவனுக்கும் தெரியாமல் உமரும் கூடவே போனார். அப்போது தன் தம்பியாகிய இம்லாக்குடைய பட்டணம் போய்ச்

சேர்ந்து, இரண்டுபேரும் தோப்பினுள் உட்கார்ந்து சில சங்கதிகளைப் பேசிக் கொண்டிருந்து பின்பு அண்ணுவைப் பார்த்து ஒ அண்ணு! எதனாலே மூசிபத்து உன்னை வந்து பிடித்தது உன்னுடைய அளவற்ற படைகளெல்லாம் எங்கே மறைந்து போய் விட்டது. நீ இக்கோலமாக வந்தீரென்று கேட்டதற்குத், தம்பியே! கேளும். என் மகளென்னை இக்கோலம் செய்துவிட்டாள். என்னைக் கெடுத்துப் போட்டாள், இன்னும் இஸ்லாமனவர்களுடன் கூடி தானும் இஸ்லாமாகிவிட்டாள். இன்னும் நம்முடைய தெய்வங்களைக் கொண்டு மூகக்திருப்பினுள். இன்னும் தெய்வத்தை விட்டு விட்டோமே என்று கொஞ்சமும் வெட்கமில்லை. இன்னும் பிச்சைகாரமுண்டை என் மானத்தையும் போக்கினுள் அவளாலென் வெட்கமும் போய்விட்டது. இவள் இஸ்லாமாகி என்னைப் பாழ் படுத்தியும் விட்டாள். இன்னும் மதீனத்தார்களைக்கொண்டு வந்து நான் ஊரைவிட்டு ஓடும்படியாகவும் செய்தாள். இதனுல் நான் இந்த ஹாலாக ஓடிவந்தேன். ஆனுல் என் உயிருக்கு ஓரிடம் இருப்புமில்லை. இதனுல் என்னுயிர் கலகத்திலிருக் தொருவேளை இங்கேயும் தேடிக்கொண்டு வருவார்கள். அப்போது நான் இவ்விடமும் விட்டு ஓடிப்போக வேண்டியதாய்வரும். அவர்களென்னை நிசமாக வெட்டாமல் விடுகிறதுமில்லை. இங்கே வந்தால் தகப்பனுடைய மவுத்திருக்கின்றது. இன்னமவளுக்கு இஸ்லாமானவர்களுடைய தோஸ்தியே பெரிதாயிருக்கின்றது. எனக்கு அவள் பின்னுல் இப்படிப்பட்டதை யெடுப்பாளென்றறிவேனுகில் அப்போதே அவளை உயிரோடு வைக்காமல் கொன்றுபோடுவேனே. ஆனுல் அப்படிப்பட்ட வருத்தங்கள் வந்து என்னைப் பிடிக்காது. இஸ்லாமானவர்கள் என்னை வந்து வருத்தஞ் செய்யார்கள் என்று நானுவிதமாகிய பேச்சுகளெல்லாஞ் சொல்ல, அதற்கு தம்பியாகிய இம்லாக்கு நீ ஒன்றுக்கும் பயப்படவேண்டாம், உன்னுயிருக்கு என்னுயிரைக் கொடுப்பேனென்று சொல்லி கழுத்தோடு சேர்த்துக் கட்டியணைத்து, நீ ஒன்றுக்கும் அஞ்சாதே! அவர்களுக்கு இங்கு வர என்ன வல்லமையுண்டு, அண்ணு! வென்று சொன்னுன். அவைகளெல்லாம் உமர் கேட்டுக்கொண்டிருந்து தன் தலைமேலிட்டிருந்தகுல்லாவைக் கழற்றிக்கையிற் பிடிக்கவும் இவருடையஉருவம் எல்லாருக்குந்நன்றாய்த் தெரியலாயிற்று. அப்போதுஉமர் இறமின் ராஜனைப்பார்த்து நீ எதுவரையும்எங்கள்கையிலகப்படாமலதப்பித்துத் கொண்டு நீஓடுவாய்! நீஇப்படிஓடுவதைநினைத்துஉனக்குவெட்கமும் வரவில்லையேயென்று சொல்ல,உமரைப்பார்த்து இடுகலங்கி வாய் நீருலர்ந்து ஓ தம்பியே! நான் இங்கு பயந்து வந்ததும் இம்மூதேவி என்னை விடாமல் பின் தொடர்ந்தானே யென்று சொல்ல, அப்போதுஇம்லாக்கு தன் கூட்டத்தார்களைப்பார்த்து இவனை விடாமல் பிடியுங்கள் வெட்டுங்களென்று சொல்ல, [illegible]த

அவனுடைய சேவகர்கள் கேட்டு ஓடோடியும் பிடிக்கப்போனார்கள். அப்போது உமர் தன் கையிலிருந்த குல்லாவைத் தலையிலிட்டுக் கொண்டார். உடனே ஒருவர் கண்ணுக்குந் தெரியாமல் மறைந்து விட்டார். அங்கிருந்து நடந்து ஓடி அலிறலியல்லாஹு இடத்திற்கு வந்து இறமின் அரசன் இன்ன வூரில் அவன் தம்பியினுடைய பட்டணமிருக்கிறது. அங்கு ஓடிப்போயிருக்கிறானென்று அங்கு நடந்த சங்கதிகளெல்லாம் ஒன்றுந் தவறாமல் ஆதியோடந்தமாகச் சொல்லினார். அவைகளை யெல்லாம் அலியார் கேட்டு, நல்லது அவன் அவ்விடமாயிருக்கிறான். ஆகையால் நாம் அங்குப் போக வேண்டியதாயிருக்கும். பேரிகை அடியுங்களென்று உத்திரவு கொடுத்தார். அதேபடி அங்குப்போக பேரிகை அடித்தார்கள். எல்லாப் படைகளும் போகத் தயாராகிவிட்டார்கள். காலமே யெழுந்து வழிகளெல்லாம் தொலைத்துவிடுதிவிடுதியாக இறங்கி அப் பட்டணத்தின் அருகிற் சென்றார்கள்.

## அலங்காரக்கண்ணி.

காடுமலைகளைத் தாண்டிதாண்டியே கடுகநடந்துபோனார்
இவர்கள்வருகிற செய்தியைத்தூதர்கள் ஓடிப்போய்ச்சொன்னார்
அந்தச்செய்தியைக் காதிலேகேட்டு அப்போது இம்லாக்கு
மந்திரிமார்களே மந்திரிமார்களே என்சொல்லைக்கேளும்
சீக்கிரமாகவே நம்முடையபடைகளைச் சேகரமாய்ச்செய்யும்
அறபி தேசத்தார் படைகளைக்கூட்டி வாரார்சண்டைக்கு
வீரியமாகவே வாரார்சண்டைக்கு வெல்லவோநம்மோடு
என்றசொல்லைக் காதிலேகேட்டு எல்லாமந்திரிமாரும்
படைகளைவரச்சொல்லி பேரிகையடித்தார்கள் அந்நேரவேளையிலே
பேரிகைசத்தங் கேட்டவீரர்கள் பெரிய சண்டைசெய்ய
சமுத்திரம்போலகூடினாரெல்லாம் தத்துவமிகபேசி
கத்திகாரர்களும் ஈட்டிகாரர்களும் கடுகஓடிவந்தார்
அம்புக்காரர்களும் தண்டக்காரர்களும் அலறி ஓடிவந்தார்
பட்டக்காரர்களும் சக்கரகாரர்களும் பதறி ஓடிவந்தார்
பெரும்படையாகக் கூடினாரெல்லாம் கோட்டைக்குள்ளாக
குமுகுமுவென்று குமுறுதுநகரா கோடைமிடிபோல
வகைவகையான வாத்தியமாகுது வண்டர்படைக்குள்ளே
மேளவாத்தியம் முழங்குதுமெத்த வேடிக்கைமிகவாக
சாமியைப்போய் வரங்கேட்டார் சத்திராதியைவெல்ல
புத்தைவரங்கள் கேட்டாரெல்லாம் பொடிபொடியாமடிய
கோட்டையைவிட்டு வெளியினில் வந்தார் கோடிபடையாக
வந்தபடைகளைக் கண்ணுற்கண்டார் வல்ல அசுஹாபுகள்
அந்தவேளையி லென்னசெய்தார் ஆதிபுலியுல்லா

படைகளை அணியணி யாகவளைத்தார் பார அலியுல்லா
பூமியதிர்க்திடப் படைகளை நிறுத்தினர் பெரிய அலியுல்லா
அக்தவேளையில் இம்லாக்கோடு இறமின் ராஜாவும்
குதிரையின்மே லிரண்டுபேருமாகவக்தார் கோபமிகக்கொண்டு
படைமுன்வக்து இம்லாக்கென்போன் பார இடிபோல
ஸைத்தூன் தன்னை சண்டைக்கழைத்தான் இம்லாக்குராஜன்
சிற்றப்பன் சண்டைக்கு அழைத்ததை கேட்டாள் சிங்கஸைத்தூனு
அலியார்கிட்டே ஸைத்தூன்வக்து அதபாய்கைகட்டி
என்னுடைய சிற்றப்பன் சண்டைக்கழைக்கிறன் எனக்கு விடைதாரும்
என்றசொல்லைக் காதிலேகேட்டு ஏகன்புலியலியார்
பெண்கள் சண்டைக்கு போகிறது சரியல்ல பேசாமலில்லும்
அவனைவெல்ல அசுஹாபுமார்களை அனுப்புகிறேனென்னும்

வசனம்.

இப்படி அலிறலியல்லாஹு ஸைத்தூனுக்குச் சொல்ல, அதை ஸைத்தூன்கேட்டு ஓ பாதுஷாவே! என்னை இப்போது சண்டைக்கு அழைக்கிறது என்னுடைய சிறிய தகப்பன். ஆகையினல் நான் அவனுடனெதிர்க்க எனக்கு விடைதாரவேணுமென்று கேட்க அச்சொல்லைக் கேட்டு அலிபுலிபோக விடைகொடுத்தார். உடனே ஸைத்தூன் குதிரையின்மேலேறித் தன்சிறிய தகப்பனுகிய இம்லாக்கின் முன்னில்போய் மிகுக்த ஆங்காரத்தோடு நிற்க, அதுகண்டு இம்லாக்கும் எதிரில்வக்து நின்று, ஓ மகளே! யென்று அதிகக் கோபத்தோடு நீ யென்னவிதத்திற்காக உன் தாய் தகப்பனுடைய பட்டணத்தை யழித்துக் கெடுத்துபோட்டாய்: இன்னும் நம்முடைய பெரிய சாமியைக்கொண்டும் உனக்கு வெட்கம் வரவில்லையா? இன்னும் அதனுடைய பயமில்லையா? இன்னும் நீ உங்கள் பெரியவர்களுடைய நடத்தைகளையும் விட்டு விட்டாய், இன்னும் நீ உன் மார்க்கத்தை விட்டு இஸ்லாம் மார்க்கத்தைக் கைகொண்டாய். இன்னுமெங்களை மோசஞ்செய்து அவர்களுடனங்குபோய் கூடியதனல் நீ பார்த்தாயா, உன்னை நம்முடைய பெரியசாமி இங்கே யிழுத்துக்கொண்டு வக்து விட்டது. அது எதினலெனில், நீ குற்றவாளியானபடியினலே இங்கு வெட்டுண்டு போகக் கொண்டு வக்து விட்டது. நீ இன்று என் கையால் வெட்டுண்டு போவாய். தண்டாயுதத்தாலுன்னை யடிக்கிறேன் நீ தப்பித்துக்கொள்ளென்று உடனே தண்டாயுதத்தால் தலைமேல் ஓங்கியடித்தான். அவ்வடியை ஸைத்தூன் தன் கையிலிருக்த கேடகத்தினல் தாங்கிக்கொண்டார்கள். பின்னுமடித்தான், அதையும் தாங்கிக் கொண்டார்கள். பின்பு மூன்ருவதாம் அவன் பெலமெல்லாங் கூட்டிக் கத்தியையுருவி தன்னுடைய பெரியசுவாமியை மனதில்

கிணைத்து ஓங்கி வெட்டினான். அவ்வெட்டு எப்படி விருந்த தெனில் மாசியில் நின்று இடிவீழ்ந்தாற் போலிருந்தது. அவ்வெட்டையும் ஸைத்தூன் தப்பித்துக்கொள்ள அவன் பெருமூச்சுவிட்டு நம்முடைய அடிமூன்றும் விருதாவாய்ப் போயிற்றேயென்று ஆச்சரியப்பட்டு மெய்மறந்து திகைத்து நின்றுவிட்டான் அப்போழுது ஸைத்தூன் தன்னுடைய வல்லமையை அவன்பேரில் காட்ட, கோடையிடிபோல ஒரு வெட்டு வெட்டி பின்பு அவனுடைய இடுப்பில்கையைப்போட்டு ஜீனேடு மேலுக்குத் தூக்கிக்கொண்டு அலிறலியல்லாஹு விடத்திற் கொண்டுவந்து நீ கலிமா சொல்வாயாகில் உன்னுயிரோடு பிழைத்துப்போவாய், இல்லாவிடில் இப்படியே அடிப்பட்டு போவாயென்று சொல்ல, அதற்கவன் என்னுயிற் போனபோதிலும் ஒரு பொழுதும் நான் கலிமா ஓதமாட்டேனென்றுசொன்னான். அவன் சொன்னதை ஸைத்தூன் கேட்டு உடனே தன் கத்தியையுருவி இரண்டு துண்டாகத்தலையை யறுத்து அவனை நரகத்திற்கு அனுப்பிவைத்தார்கள்.

## 2- வது தம்பியிடத்திற்கு ஓடிப்போகுதல்.

இம்லாக்கு வெட்டுபட்டுப்போனதை இறமில் பாதுஷா கண்டு பயந்து இனி நாம் இங்கிருக்கக்கூடாது. இருக்கில் உயிருக்குச் சேதம் வருமென்று பயந்து தன்கூட சில குதிரைகளைச் சேர்த்துக் கொண்டு அவ்விடம் விட்டு இன்னொரு தம்பியினுடைய பட்டணத்திற்கு ஓடிப்போய் விட்டான். பின்பு அலிறலியல்லாஹு அப்பட்டணத்தைப் பிடித்துக் கொண்டு எல்லோரையும் தீனிலாக்கி ஈமான் கொள்ளும்படி செய்து அவ்விடமிருந்து உமரைக் கூப்பிட்டு இறம் பாதுஷா எங்கே ஓடிப்போய்யிருக்கிறான். அவன் போயிருக்கும் இடத்தைக் கண்டுபிடித்து வாவென்று சொல்ல, அதைக் கேட்டு உமர் சீக்கிரமாக வெளிப்பட்டு அவன்பின் தொடர்ந்து போய் இடை வழியிற் கண்டுபிடித்து அவனுக்குத் தெரியாமல் கூடவே போனார். அப்போதவன் தம்பியினுடைய பட்டணத்தினருகேபோய் தான் வந்த செய்தியைத் தூதர்களால் தம்பிக்குத் தெரியப்படுத்த, உடனே தம்பி எதிர் கொண்டு வந்து அண்ணனையழைத்துப்போய் ஒரு தோப்பினிடமாக உட்கார்ந்து இருவரும் பேசுகையில், தம்பி அண்ணனைப்பார்த்து உனக்கு என்ன மிடிமைப்பிடித்தது? இன்று பெரிய மூசிபத்து வந்த வகையைச் சொல்லென்று கேட்டான். அதற்கு அவன் தம்பியைப்பார்த்து என் மகளால் எனக்கு இப்படிபட்ட பலா மூசிபத்து வந்து பிடித்தது. என்னுயிரையு மிழக்கும்படி நேரிட்டது. இன்னும் இஸ்லாமான படைகளைக் கூட்டிவந்து என் பேரில் விட்டாள். அவர்கள் என்னூரையும் பிடித்துக் கொண்டார்கள். இன்னும் இம்

லாக்கையுங் கொன்று அவ்வூரையும் பிடித்துக் கொண்டார்கள். அதனால் நான் அங்கிருந்து இங்கு உன்னிடத்திற்கு ஓடி வந்து விட்டேன். என்னுயிரைத் தப்பிக் கொண்டேனென்று நானு விதமாகிய பேச்சுகளெல்லாஞ் சொல்ல, அதற்குத் தம்பி நீ ஒன்றுக்கு மஞ்சவேண்டாம். அவர்களிங்குவர என்ன வல்லமை யுண்டு. நீ பயப்படாமலிருமென்று சொல்ல, அப்போது உமர் தன் தலைமேலிருந்த குல்லாவைக் கழற்றவும், எல்லார் கண்ணுக்குந் தெரியலானார். அப்போது ஷாஹே இறம் உமரைக்கண்டு ஹாவென்று சத்தமிட்டான். பின்பு இந்த பலா மூசிபத்து என்னை விடவேயில்லை. பின்றொடர்ந்து வருகிறதேயென, அதற்கு உமர், ஒ பாதுஷாவே! உனக்கு இவைகளெல்லாஞ் சொல்ல கொஞ்சமும் வெட்கமில்லையே, ஓடி ஓடி அலைகிறாயேயென, அது கேட்டு ஷாஹெ இறம் தம்பியைப் பார்த்து இத்தப்பாவி கால் நடையாக நானெங்கே போகிறேனோ அங்கெல்லாம் வந்து கண்டுபிடிக்கிறான். எல்லாப் பலாயும் இவனைக்கொண்டே வருகிறதென்று சொல்ல, உடனே உமரைப் பிடிக்கும்படியாக உத்திரவு கொடுத்தான்.

அப்போது உமர் தன் கையிலிருந்த குல்லாவை யெடுத்துத் தலையிலிட்டுக் கொண்டார். உடனே யார் கண்ணுக்கும் தெரியாமல் மறைத்து விட்டார். அங்கிருந்து ஓடிவந்து சகல சங்கதிகளும் அவ்விடம் நடந்தவை யெல்லாம் ஒன்றுந் தவறாமல் உமர், அலிறலியல்லாஹு விற்குச் சொன்னார். உடனே அலிறலியல்லாஹு தன்னுடைய படைகளை அவ்விடம் விட்டெழுந்து அவனோடு ஒளித்திருக்கும் பட்டணம் போய்ச் சேர்ந்தார்கள். அப்போது அவன் அலியார் வந்த செய்தியைக்கேட்டுதன்னுடையபடைகளையெல்லாம் கோட்டையைவிட்டு வெளியேகொண்டு மைதானில் அணியணியாக நிறுத்தினான். உடனே அலிறலியல்லாஹு தன்னுடையபடைகளையும் அணியணியாக நிறுத்தினார். அப்போது இரண்டுபடைகளுமொன்றோடொன் றெதிர்த்து இரத்த ஆறு ஓடிவிட்டது. எங்கே பார்த்தபோதிலும் பிணங்கள் மலைமலையாகக் குவிந்து விட்டன, இன்னும் கால் வேறாகவும், தலை வேறாகவும், உடல் வேறாகவும், கைவேறாகவும் வெட்டுண்டு பிணக்காடாய் விட்டது. அப்போது ஷாஹே இறமினுடைய தம்பியானவனுக்குக் கண்களிரண்டும் சிவந்து நெருப்புப் பறக்கும் படியாக இரண்டு படைக்கும்

நடுவில் வந்து நின்று, ஓ அறபுகளே! நீங்கள் யாவரும் என்னோடெதிர்க்க வரவேண்டியதில்லை. ஸைத்தூனென்பள் வரவேணுமென்று கூப்பிட்டுச் சொன்னான். அந்தச்சொல் எல்லார் காதிலும் விழுந்தது. அப்போது ஸைத்தூன் விடைபெற்றுக் கொண்டு தன் குதிரையின் மேலேறி மிகுந்த ஆரபாரத்தோடு அவன் முன்னாகபோய் நின்று, நீயேன் என்னை யழைத்தாயென்று கேட்க, அதற்கவன் நீ இஸ்லாமாகி அந்த மார்க்கத்திலாய் உன் தகப்பனை யூரைவிட்டு பறக்கும்படி செய்தாய். இன்னும் உன் சிறிய தகப்பனாகிய இம்லாக்கையும் கொன்று போட்டாய். நீ கேடுகெட்ட வழியே யெடுத்து இன்று என் பேரிலும் சண்டைக்கு வந்தாய் என்று சொல்லி, ஆங்காரத்தோடு அதிககோபங்கொண்டு கத்தியை யுருவி வெட்டினான். அவ்வெட்டை ஸைத்தூன் தன் கேடகத்தால் தாங்கிக்கொண்டு அவனுடைய இடுப்பில் கையைப் போட்டு தலைக்குமேல் தூக்கிக்கொண்டு, இப்போது நீ சீக்கிரமாகக் கலிமா ஓதி ஈமான் கொள்வாயாகில் உன்னை உயிரோடு விட்டுவிடுகிறேன், இல்லாவிடில் இப்படியே தூக்கி பூமியிலடித்து விடுகிறேனென்று சொல்ல, அவன் பயந்து சந்தோஷத்தோடு கலிமா ஓதி ஈமான் கொண்டு இஸ்லாமாகினான்.

## 3-வது தம்பியிடத்திற்கு ஓடிப்போகுதல்.

அதன்பின்பு ஸைத்தூன் தன்சிறிய தகப்பன் ஈமான்கொள்ளவும் அதிக சந்தோஷத்துடனே அலிறலியல்லாஹு விடத்திற்குக் கொண்டு சந்திக்கவைத்து அலியார் அவ்வரசனைமாரோடு கட்டியணைத்து அதிக பிரியஞ்செய்யமற்றவர்களையெல்லாம் இஸ்லாமாக்கி அவ்விடமே யிருந்தார்கள். அப்போது ஷாஹேஇறம் அவ்வூரை விட்டு சில குதிரைகளுடன் இன்னொரு தம்பியினிடத்திற்கு ஓடிப்போய்விட்டான். பின்பு அலிறலியல்லாஹு ஷாஹேஇறமை தேடிப்பார்க்கையில், அவன் தம்பியிடத்திற்கு ஓடிப்போய் விட்டானென்று விசாரித்து வந்து சொன்னார்கள். அதை அலியார் கேட்டவுடனே உமரை யழைத்து அவனெங்கே போயிருக்கிறான். பார்த்து விசாரித்து கொண்டுவாவென்று உத்திரவு கொடுக்க, உமர் காற்றின் விசைபோல நடந்துபோனார். உமர் பின்தொடர்ந்து வர ஷாஹேஇறம், தம்பியின் கோட்டைக் கிட்டேபோய் தான்வருகிற செய்தியை ஒரு ஆளுடன் சொல்லியனுப்ப, அச்செய்தியை

அவன் தம்பிகேட்டு எதிர்கொண்டு வந்து அழைத்துக் கொண்டு போய் கோட்டைக்குள் நல்ல விரிப்புகள் விரித்து அதன்பேரில் அண்ணனை உட்காரவைத்து சகல சங்கதிகளும் விசாரித்தான். அப்போது அவன் முகத்தைப்பார்த்து நானென்ன செய்வேன் கோடாரிகாம்பு குலத்திற்கு ஈனமென்பது போல என்மகளென்னை இக்கோலஞ் செய்து ஊரை யிழக்கவும், சேனைகளை யிழக்கவுஞ் செய்தாளென்று சொல்ல, அதற்குத் தம்பியானவன் நீ யொன்றுக்கும் அஞ்சவேண்டாம், உன்னுயிருக்கு என்னுயிரைக் கொடுப்பேன். இன்னும் அதிக ஒத்தாசைகளும் செய்வேனென்று தைரியஞ் சொல்லிக் கொண்டிருக்க, உமர் இவைகளையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்து தன் தலைமேலிருந்த குல்லாவைக் கழற்றி கையிற் பிடித்திடவும், உமரை யெல்லாரும் பார்த்தார்கள். அப்போது உமர் நிற்கிறதை ஷாஹோ இறம் பார்த்து பயந்து கிடுகலங்கி வாய் நீர் காய்ந்து தம்பியைப்பார்த்து, இதோ நிற்கிறானே இப்பாவி என்னை யெங்கும் விடாமல் நான் போகுமிடந்தோறும் பின் தொடர்ந்து கால்நடையாகவே வருகிறானென்று சொல்ல, உடன் அவனைப்பார்த்து அடா பயித்தியக்காரா! உனக்கு ஓடிப்போகிற மென்று கொஞ்சமும் வெட்கமில்லையே. ஆனாலும் நீ எங்கெங் கோடினாலும் உன்னை விடாமற் பின்றொடர்ந்து வருவேனென்று சொல்ல, அதுகேட்டு சீக்கிரமாய் இவனை விடாமல் பிடியுங்க ளென்று தன் சேவகர்களுக்கு உத்திரவு கொடுத்தான். அப்போது உமரைப் பிடிக்கச் சேவகர்கள் ஓடிவந்தார்கள்.

அந்நேரம் உமர் கையிலிருந்த குல்லாவை எடுத்து தன்தலையிலிட்டுக்கொண்டார், உடனே யார் கண்ணுக்கும் தெரியாமல் மறைந்து விட்டார். அங்கிருந்து நேராய் அலிறலியல்லாஹு விடத்திற்கு வந்து அங்கு நடந்த சங்கதிகளொன்றுந் தவறாமல் சொன்னார். உடனே அலிறலியல்லாஹு அங்கே போகப் படைகளைக்கூட்டிக்கொண்டு வெளியே புறப்பட்டுப் போகையில் இச்சங்கதிகளைத் தூதர்களோடிபோய் அவ்வரசன் முன்னின்று இங்குப் படைகளை எடுத்துக்கொண்டு அலியார் வருகிறாரென்று சொன்னார்கள். அலிபுலியும் அப்பட்டணம் போய்ச்சேர்ந்தார்கள் பொழுதும் போய்விட்டது. காலையிலேஇரண்டு படைகளுமெழுந்து மைதானில்வந்து நின்றார்கள். அன்று ஒன்றுக்கொன்றுபோரி

ஆறாக இரத்தமோடினது. பின்பு இறம் ராஜனின் தம்பி தன் குதிரையின் மேலேறி அந்த மைதானில் வந்து நின்று, ஓஸைத்தூனே! நீ இங்குவா. நான் உன் இடத்தில் பழியைவாங்கவேணும்மென்று கூப்பிட்டான். அந்தச்சத்தத்தை ஸைத்தூன் கேட்டுஅலியிடத்திற்குப்போய், என் சிறிய தகப்பன் ஏனோ அழைக்கிறான். போக விடைதாருமென்று விடைவாங்கித் தன் குதிரையின் மேல் ஆங்காரத்தோடு ஏறி சிறிய தகப்பன் முன்னாக வந்து நிற்கவும், அவன் ஸைத்தூனை கண்டு, இரண்டு கண்களும் சிவக்க கடுங்கோபங் கொண்டு தன்னுடைய கத்தியினாலே கோடையிடிபோல ஓங்கி வெட்டினான். அவ்வெட்டை ஸைத்தூன் கேடகத்தினாற் றாங்கிக் கொண்டு அவனிடையில் கைப்போட்டு அவனை மேலுக்கு தூக்கி, ஓ சிறிய தகப்பனே! சீக்கிரமாகக் கலிமா ஓதி ஈமான் கொள்வாயாகில் உன்னுயிர் தப்பும், இல்லாவிடில் இப்படியே வாரி பூமிமேலடித்து விடுகிறேனென்று சொல்ல, அவன் பயந்து கலிமா ஓதி ஈமான் கொண்டு இஸ்லாமாகினான்.

## 4-வது தம்பியிடத்திற்கு ஓடிப்போகுதல்.

அப்பொழுது ஸைத்தூன் தன் சிறிய தகப்பனை அலிறலியல்லாஹு விடத்திற்கு அழைத்துக்கொண்டு வந்துவிடவும், நிரம்பவும் சந்தோஷப்பட்டு அவன் படை முழுவதையும்இஸ்லாமாக்கினார்கள். பின்பு ஷாஹேஇறம் அவ்விடம்விட்டு இன்னொரு தம்பியினிடத்திற்கு ஓடிப்போய் விட்டான். அன்று அலிறலி உமரைக் கூப்பிட்டு இறமின் ராஜன் எங்கே போயிருக்கிறான் கண்டறிந்து வாவென்று விடைகொடுக்க, உடனே உமர் அவன் பின்றொடர்ந்து அவனுக்குத் தெரியாமல் கூடவேபோக, இரண்டுபேரும் அப்பட்டணத்தின் அருகேபோனார்கள். ஷாஹேஇறம் போனவுடன் தான் வருகிற செய்தியைத் தன் தம்பிக்குச் சொல்ல ஆளொன்று அனுப்பினான். அத்தூதன் போய்ச்சொல்ல, உடனே தம்பி எதிர் கொண்டு வந்து அண்ணனுடன்சந்தித்து ஒருவருக்கொருவர் க்ஷேமங்கள் விசாரித்துக்கொண்டு அவ்விடம் விட்டுக்குதிரையின் மேலேறிக் கோட்டையைப்போய்ச் சேர்ந்தார்கள். பின்பு தம்பி அண்ணன் முகத்தைப்பார்த்து, அதிகமெலிவோடு, தங்கள் சேனைகளை விட்டு விட்டு சில குதிரைகளுடனே இக்கோலமாக இங்கு வரவேண்டிய காரண மென்ன நேரிட்டதென்று கேட்க, அதற்கு

தமையனுன இராஜன் தம்பியின் முகத்தைப் பார்த்து, இப்படி தன்னுடைய மகளால் சம்பவித்ததைச் சொல்ல, அதை தம்பி கேட்டு, இனி மேல் நீ ஒன்றுக்கும் பயப்படாதே, அவர்களிங்கு வரமாட்டார்கள். அப்படியே மிஞ்சி வந்தால் உன்னுடைய பழியை நான் வாங்குவேன். அஞ்சாதே யென்று தைரியஞ் சொல்லிக் கொண்டிருந்தான். அந்தச் சமயத்தில் உமர் தன் தலைமேலிருந்த குல்லாவைக் கழற்றிக் கையில் பிடிக்கவும், எல்லாரும் உமரைக் கண்ணுற் கண்டார்கள். அப்பொழுது இறம் ராஜனை உமர் கூப்பிட்டு, இப்படி நீ தேசக்தேசமாக ஓடுகிறதை நினைத்து உனக்கு கொஞ்சமேனும் வெட்கமில்லையா? வென்று சொல்ல, உமரை ராஜன் பார்த்து தம்பியின் புறமாக திரும்பி, இப்பாவி என்னை விடுகிறதேயில்லை. நான் எங்கெங்கே போகிறேனே அங்கங்கே விடாமல் பின்றொடர்ந்தே வருகிறுன். இவனுல் தான் எனக்குப் பெரிய பலா முசீபத்திருக்கிறது. இன்னுமிவன் பரியோ, அல்லது தேவோ, அல்லது காற்றோ, நானென்ன சொல்வேன், ஒரு நொடி குள் கண்ணிற்குத் தெரியாமல் மறைந்து விடுகிறுனென்று நானுவித மாகிய சங்கதிகள் சொல்ல, அதை அவன் தம்பிக் கேட்டு சேவகர் களைப் பார்த்து அவனை விடாமற் பிடியுங்க ளென்று சொல்ல, உடனே சேவகர்கள் நகமுகமுஞ் சூழ்ந்து பிடிக்க வந்தார்கள். அப்போது உமர் தன் தலைமேல் குல்லாவை யெடுத்துப் போட்டுக் கொண்டார். உடனே ஒருவர் கண்ணுக்குத் தெரியாமல் மறைந்து விட்டார். இன்னும் எத்தனையோ பேர்களுடைய தலைப்பாகை களைப் பிடுங்கித் தன் சோலியிலிட்டுக் கொண்டு அவ்விடம் விட்டு நீங்கி அலி றலியல்லாஹு விடத்திற்கு வந்து ஒன்றுக் தவருமல் அங்கு நடந்த செய்திக ளெல்லாம் சொன்னுர். அச்செய்தியை அலி றலியல்லாஹு கேட்டு, மறு நாள் தன்னுடைய படைகளை யெல்லாஞ் சேர்த்துக் கொண்டு அவ்விடம் விட்டுக் கிட்டே போனுர்கள்.

## அலங்காரக்கண்ணி.

தூதர்கள்படை வருவதைக்கண்டு திடுக்கமிகவாகி
கையும் நடுங்க காலும்நடுங்கக் கனத்த ஓட்டமாக
ஓடியே போனுர் ராஜன்கிட்டே உற்றச்செய்திசொல்ல
தண்டமிட்டார் ராஜாவுக்குத் தூதுசொல்வோர்கள்

ராணுவமுடைய எங்களையாளும் ராஜாவேகேளும்
பெரியகடல்போல் திரண்டுவருகிறது படையின் பெருங்கூட்டம்
என்றசொல்லைக் காதிலேகேட்டான் எதிராளிராஜன்
நல்லதுநல்லது வந்தால்வரட்டும் நாமறிவோம் சண்டை
மந்திரிமார்களே நம்முடைய படைகளை வரச்செய்யுமங்கே
தயாராயிருந்தால் எதிரியைவெல்ல திராணிமெத்தவுண்டு
ராஜன் சொல்லக் கூட்டினார்படையை ரணக்களம்போல
அந்த வேளையில் வந்தாரங்கே ஆதிப்புலியலியார்
படைகள் வந்ததை ராஜன்கண்டு படையெடுத்து வந்தான்.
கோட்டையைவிட்டு வெளியே வந்தான் கோடிபடைசூழ
அந்தவேளையி லிரண்டுபடைகளும் அடுத்தார் சண்டைக்கு
ஈட்டிவில்லும் கையிலே பிடித்து எதித்தார் சண்டைக்கு
அம்புவில்லுங் கையிலே பிடித்து எதித்தார் சண்டைக்கு
மழையைப்போல பொழிந்தாரம்பு விருதுமிகப்பேசி
மின்னலைப்போல மின்னுது கத்திகள் மேகயிடிபோல
சண்டைபேரிகை அடித்தார் நின்று சண்டைமூண்டுபோச்சுது
மண்ணும் விண்ணும் மூடிக்கொண்டது மன்னர் வாளாலே
ஆறாயோடி போச்சுது ரத்தம் அந்தச்சண்டையினாலே
மலைமலையாகப் பிணங்கள்குவிந்து மாண்டார்வாளாலே
படைகள் முறிந்து போனதைக் கண்டான் பட்டணத்து ராஜாவும்
குதிரைமேலேறி வந்தான் சண்டைக்கு கொக்கரித்துக் கொண்டு
வந்ததைக்கண்டு போனார்குதிரைமேல் முஹம்மது ஹனிபாவும்.

வசனம்.

அப்போது முஹம்மதனிபு அவனுடைய இடுப்பில் கையைக் கோர்த்து குதிரைமே லிருந்தவனை மேலுக்குத் தூக்கிக் கொண்டு ஓ ராஜனே! நீ சீக்கிரத்தில் இப்பொழுது கலிமா ஓதுவாயாகில் உன்னுயிரையும் மன்னித்து விடுவேன். உன்னுடைய அரசையுங் கொடுப்பேன். நீயும் பிழைத்துப் போவாய். இல்லாவிடில் இப்படியே பூமியில் வாரி மோதிக் கொன்று போடுவேனென்று சொல்ல, அவன் பயந்துடனே கலிமா ஓத, அலி றலியல்லாஹு-வின் கிட்டே கொண்டு வந்து சந்திக்கச் செய்தார். அவனைப் பார்த்து அலியார் அதிக சந்தோஷப் பட்டார்கள். பின்பு ஷாஹே இறம் வைக ளெல்லாம் பார்த்து, தன் தம்பியும் கலிமா ஓதி ஈமான்

கொண்டதைக் கண்டு இனி நாம் இங்கிருக்கலாகாது. எங்கேயாவது ஓடிப்போக வேணுமென்று யோசனை பண்ணிக் கொண்டு நிற்கிறதை அலியார் கண்டு, இனி நாம் இவனை விடலாகாது, விட்டால் ஓடிப்போவா னென்றெண்ணி உடனே துல்துல் குதிரைமே லேறி அவன் முன்பாகப் போய் நின்று, ஓ இறமினுடைய ராஜனே! நீ எவ்வளவு தூரம் ஓடுவாய். எங்கெங்கே ஓடிப்போவாய், எங்களை எவ்வளவு தூரம் திரிய வைப்பாய். நீயும் எதுவரைக்கும் ஊரூரா யோடுவாய், நீ ஆண்பிள்ளையானால் மைதானில் நின்று உன் வல்லமையைக் காட்டென்று சொல்ல, அப்பொழுது இறமின் ராஜவிற்கு அதிக வெட்கம் பிறந்து அதிக வீரியத்துடன் அலி றலியல்லாஹுடன் எதிர்த்து பேரிடிப் போல் கத்தியை யுருவி வெட்டினான். அவ்வெட்டை அலி புலி தப்பித்துக் கொண்டு அவனை மேலுக்குத் தூக்கிக் கொண்டு அவனுக்கு அதிக ஒப்புகள் சொல்லி, நீ கலிமா ஓது உன்னுயிர் மீண்டு நீ சந்தோஷ மடைவாய். இல்லாவிடில் வீணாக உன்னுயிரை யிழந்து நரகத்துக்கிரையாய்ப் போவாயென்று சொல்ல, அச்சொல்லை இறமின் அரசன் கேட்டு நிரம்ப குன்றுதலாய் இனி நம்மால் ஒன்று மாகிறதில்லை, இது நமக்கு கடைசி வேளை. ஆகையால் இந்நேர வேளையில் நமக்கு உதவியாகப் படைகளுமில்லை. அண்ணன் தம்பிகளுமில்லை. இனி பந்துக்களுமில்லை. ஓடிப்போகலா மென்றாலும் அகப்பட்டுக் கொண்டிருக்கிறோம். ஆனால் இந் வேளையில் கலிமா ஓதாவிடில் ஒரு விதியுமில்லை. இந்நேர வேளை யில் நாம் நித்திய காலம் தவறாமல் பூசைகள் செய்து வந்த சாமி களும் அல்லது பெரியசாமி யாவது முன்னும் பின்னும் நமக்கு உதவி யொத்தாசைசெய்து நம்மை வெல்லும் படியாக உதவியாகவு மில்லை யென்று தௌபாச் செய்து விட்டு வாக்குமனதோடு சந்தோ ஷத்தால் கலிமா ஓதி ஈமான் கொண்டு இஸ்லாமாகினர். அப்போது அலி றலியல்லாஹு அதிகக் கிருபைச் செய்து என்னுடப் பிறப் பாளா! வென்று உடனே முஹம்மது ஹனிபையும் தாலிபலியையும் உமர் அலியையும் அழைத்து அவன் படைகளை யெல்லாம் இஸ்லா மாக்கி விட்டுப் பின்பு இறமிற்குப் போய் பட்டங் கட்டி சிம்மா தனத்தின் மேல் உட்காரவைக்க வேணுமென்று சகல படைக ளுடனே இறமுக்குப் போக வரும்போது அவன் தம்பிமார்க ளுடைய பட்டணங்களை அவருக்கே ஆளும்படி கொடுத்து விட்டுப் பின்பு இறமுக்கு வந்து சேர்ந்தார்கள்,

பின்பு மற்ற ராஜாக்களெல்லாம் அவரவர் பட்டணம் போய்ச் சேர்ந்தார்கள் பின்பு இறம் பாதுஷாவிற்குப் பட்டங்கட்டி அருகில் உட்காரவைத்து அலி றலியல்லாஹு ஸைத்தூனை தகப்பனிடத்திற்கு கொண்டு வந்து இப்பெண் உன்னுடைய மகள் ஸைத்தூன். இது வரைக்கும் கற்பழியாமல் பரிசுத்தமா யிருந்தது. இப்பொழுது முஹம்மது ஹனிபாவிற்கு நிக்காஹு செய்ய எனக்கு நாட்டமா யிருக்கிறது. நீயும் இஸ்லாமாய் விட்டாய். இன்னும் அல்லா றஸூலுக்கும் உவப்புள்ளவனை யென்று சொல்ல, அந்த சொற்களை யெல்லாம் இறம் பாஷா கேட்டு, அதிக சந்தோஷத்தோடு சம்மதப்பட்டு மிகுந்த ஆடம்பரத்தோடு படைகளெல்லாம் சூழ்ந்து அஸ்ஹாபுமார்களும் மற்று முள்ளவர்களெல்லாம் அன்று முஹம்மதனிபாவிற்கும் ஸைத்தூனுக்கும் நிக்காஹு முடித்து வைத்தார்கள். பின்பு இறமின் பாதுஷா தன் மகளுக்காக அளவற்ற பணங்களும், முத்து மாணிக்கங்களும், வெள்ளியும் குலாசீர்களும் கொடுத்து மதீனம் போகும்படியாக விடை கொடுத்தார். அப்போது அலி றலியல்லாஹு முன்னால் சிறையிலகப்பட்டிருந்த நாலுபேரையும் மீட்டிக் கொண்டு படைகளெல்லாம் சூழ்ந்துவர இறமைவிட்டு வெளியாகி சில நாள் வரைக்கும் விடுதி விடுதியாக இருந்து சந்தோஷத்தோடு மதீனமா நகர் வந்து சேர்ந்தார்கள். அப்போது அஸ்ஹாபுமார்களெல்லாம் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமுடைய றவுலாவின் சியாறத்துச் செய்துவிட்டு அவரவர் வீடு போய்ச் சேர்ந்தார்கள். பின்பு அலிறலியல்லாஹு முஹம்மது றஸூலுல்லாவுடைய றவுலாவின் கிட்டேபோய்ச் சியாறத்துச் செய்து பின்பு அநேக குலாம்களை விடுதலையாகவிட்டு அளவற்ற பணங்கள் கைர் கைராத்து கொடுத்து மிஸ்கீன்களுக்கும் அன்ன வஸ்திரங் கொடுத்து விட்டுப் பின்பு தானுந் தன் மக்கமார்களுடன் வீடு போய்ச் சேர்ந்து வாழ்ந்திருந்தார்கள்.

ஆமீன் ஆமீன்.

ஸைத்தூன் கிஸ்ஸா முற்றிற்று.



PRINTED AT SHAHUL HAMEEDIA PRESS, MADRAS. 10—1—51.

# انوار القران

# அன்வாருல் குர்ஆன்

## என்னும் திருமறைப் பிரகாசம்

1-வது ஒளி

குர்ஆன் ஷரீபின் 30-வது பாகமாகிய

## அம்மயத் ஜுஸுவின் தர்ஜுமா

(புதிய பதிப்பு)

இந்த புஸ்தகத்தில் அம்மயத் ஜுஸுவில் உள்ள எல்லா ஸூருக்களும் தர்ஜுமா செய்யப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு ஆயத்தும் முதலில் அரபியில் நூதன டைப் எழுத்தைக் கொண்டு அச்சிடப்பட்டு, அதை யடுத்த அதற்குத் தமிழில் உச்சரிப்பு காயிதாவும் போடப்பட்டு அதனை யடுத்து அந்த ஆயத்தின் பொருள் சுத்த தமிழில் போடப்பட்டிருக்கிறது. இந்த புஸ்தகம் அம்மயத் ஜுஸுவிலுள்ள ஒவ்வொரு ஆயத்திற்கும் பொருளை அறிந்து கொள்ள உதவுவதுடன் அறபியே தெரியாதவர்களும் தமிழ் எழுத்து மூலம் அம்மயத் ஜுஸுவிலுள்ள எல்லா ஸூரு வையும் ஓத தெரிந்து கொள்ள உதவுகிறது.

இதன் விலை அணா 12

அன்வாருல் குர்ஆன் 2-வது ஒளி

## ஸூரத்து யாஸீன் தர்ஜுமா

(புதிய பதிப்பு)

இந்த புஸ்தகத்தில் மேற்கண்ட அம்மயத் போலவே ஸூறத்து யாஸீனில் உள்ள ஒவ்வொரு ஆயத்திற்கும் தமிழ் உச்சரிப்புடன் தர்ஜுமா செய்யப்பட்டிருக்கிறது.

இதன் விலை அணா 8

# ஸூறத்து யாஸீனும் துஆவும்.

இந்த கிதாபில் யாஸீன் ஸூராவை அறபு வாக்யங்களைத் தமிழ் எழுத்தைக் கொண்டு திருத்தமாய் ஓதும்படியான நூதன அமைப்புகளுடையதாக இயற்றப் பட்டிருக்கிறது. இத்துடன் பெரிய துஆவும் பாத்திஹா ஓத வேண்டிய தர்த்தீபுகளும் ஒவ்வொரு விஷயத்திற்கும் ஓத வேண்டிய துஆக்களும் சேர்த்து நேர்த்தியாய் அச்சிடப்பட்டிருக்கிறது.

இதன் விலை அணா 7